


உ

கணபதி துணை.

சற்குருப்யோ நம:

# முகவுரை.

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."

அன்பார்ந்த அறிஞர்காள்!

சிரைக்குடியாக் கொண்டு விளங்குங் காரைக்குடியிலே வசிக்கும் ராம. சொ. சொக்கலிங்கச் செட்டியாரால் வெளியிடப்பட்ட "விநாயக புராணத்திலுள்ள தூர்வைபாசகப் படலம்" என்னும் ஓர் ஆபாசக்குழறுபடை அப்பிரமாணச் சுவடியொன்று சின்னாட்கு முன்னர் எமது கைக்கெட்டியது. அதனை ஆராய்வுழி, வேதாந்த சாஸ்திரங்களையும், அவற்றின் ஆசிரியர்களாகிய சகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் முதலிய பெரியோர்களையும், அவ்வழியொழுகும் ஆத்ம ஞானிகளையும், கோவிலூர் மடாலய சாதுக்களையும், பலவாறு தூஷிக்குங் கருத்தையுட்கொண்டு அது வெளியிடப்பட்டிருக்கிறதாகக் காணப்படுகிறதேயொழிய, தன் தலைப்பெயருக்குத் தக்கவாறு விநாயகப்பெருமான் பெருமையையும், அவருக்கு அதிப் பிரியமான அறுகம்புல்லின் அற்புதத்தையும், உலகத்தாருக்கு வெளியிட்டுப் பக்தியைப் பரவச்செய்யப் பதிப்பிக்கப்பட்டதாகப் புலப்படவில்லை யென்ப தொருதலையாம்.

அவர் எடுத்துக்காட்டிய சரித்திரத்தில், வேதாந்திகளால் மிகவும் புகழ்ந்து கொண்டாடப்பெறும் சனகமகாராஜா, நாரத பகவானால் விநாயகப் பெருமானிடத்துச் சைவ தீக்ஷை பெற்றுச் சைவசித்தாந்தியாகவே வாழ்ந்து முத்தியடைந்தார் என்று விளக்கப்பட்டிருந்தது. அதனைக் கண்ணுற்று, இஃதென்ன விபரீதம், எண்ணிறந்த பிரபல சுருதிகளாலும், பிரமஞானப் பெருஞ் செல்வராய மகான்களாலும், இற்றைநாள் வரையிற் பிரமஞானியெனப் பெரிதும் புகழப்பட்டுவரும் சனகர், விநாயகரிடத்துச் சைவ தீக்ஷை பெற்றுத் துவித ஞானங்கொண்டு விளங்கியவரெனக் காணப்படுகிறதே யென்றையுற்று, வடமொழியிலுள்ள இப்புராணத்தின் மூலகிரந்த சுலோகங்களையும், அதனை மொழிபெயர்த்த கச்சியப்ப பண்டாரத்தாரது தமிழ்ச் செய்யுள் வடிவாகிய நூலையும் ஒப்பிட்டுப் பார்க்க உண்மை வெளியாயிற்று. என்னெனில்:— மூலகிரந்தத்தில் சனக மகாராஜனுக்கு விநாயகக் கடவுள் பதிபசுபாச நிர்ணயத்தைப் போதித்தார் எனக் கொஞ்சமுங் காணப்பட[illegible]லையே! இதனால் பண்டாரப் பாட்டுப் பகட்டுப் பாட்டென விளக்க[illegible]வா[illegible]களாற் றன்றே!





நமது செட்டியார், சனகமகாராஜனை, ''நாரதரைக்கண்டவுடன் இருக்
கையெழா திறமாப்புற்றிருந்தானென்றும், ஈஸ்வரனில்லை, பாவ புண்ணிய
மில்லை யென்னும் மாயாவாத நெறியி லொழுகியவனென்றும்'' மேற்காட்
டிய பண்டாரத்தார் மொழி பெயர்ப்பையே பற்றுக்கோடாகக்கொண்டு, பல
வாறு வாய்கூசாது நிந்தித்துக் கைகூசாது வரையத் தலைப்பட்டார்.

மூலகிரந்தத்தில், தொழுநோயாளராய பிராமண வடிவங் கொண்டுவந்
த கணேசமூர்த்தியைக் கண்டவுடன், சனகர் "நம்மை யாளும் பரமேச்சு
ரன் அடியேனைப் பரிசோதிப்பான்கருதி இப்படிவங் கொண்டு வந்தாரோ?
எளியேனைப் புண்ணியத்தினின்றுஞ் சலிக்கச் செய்ய எமதண்ணல் இப்
பொன்வடிவம் பூண்டுவந்தாரோ? அடியேனுக்குப் புண்ணியம் இருக்கு
மானல் இவரது மனத்தைத் திருப்திசெய்ய வல்லவனுவேன்" என்று ப
லவாறு சிந்தித்து, அவரை வழிபடு முறை தவறாது வழிபட்டு, ஆசனத்தி
லமர்த்தி, அவருக்குச் சோடச வுபசாரத்துடன் அறுசுவை யுண்டிகளையும்
பூரண அன்புடன் படைத்தாரென்று காணப்படுகிறது. ஈஸ்வரனில்லை
பாவ புண்ணியமில்லை யென்ற எண்ண முடையாரா யிருப்பின் சனகர் இவ்
வாறு எண்ணி யிரங்கத்தக்கவராவரோ? இவ்வாறே மூலகிரந்தமும் மொழி
பெயர்ப்பும் ஒன்றுக்கொன்றுவ்வாது மாறுபாடாய்க் காணப்படுகின்றன.

நூலாசிரியரான பார்க்கவமுனிவரோ வேதமுதலிய வித்தியாவரம்பிற்
கட்டுப்பட்டொழுகிய பரமாத்வைதி. மொழிபெயர்ப்புப் பண்டாரத்தாரோ
வேதபாஹிய தந்திரவழியொழுகிய முழுத்த துவைதி. இவ்வாறிருக்க இரு
வர் கூற்றும் எவ்வாறு பொருந்தும். மூலகிரந்தம் பிரமாணமே யொழிய
மொழிபெயர்ப்புப் பிரமாணமாமா?

எவ்வாறெனில்:— தமிழிலுள்ள பெரிய புராணத்தை, இந்துஸ்தானி
பாஷையில் ஓர் மகமதியன் மொழிபெயர்த்துக்கொண்டு, அதிற் கூறப்பட்
டுள்ள நாயன்மார்களையெல்லாம் எங்கள் நபிமார்களென்று வாதிட்டால்
நமது நண்பர் ஒப்புவர்போலும். அல்லது, சைவ சமயாசாரியராகிய ஸ்ரீ
திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார், திருமங்கை யாழ்வாரோடு சமயவாதஞ்
செய்து தோல்வியுற்றுச், சங்கு சக்கரலாஞ்சனங்கள் தமது இருபுயங்களிலு
ம் அவ்வாழ்வாராற் பொறிக்கப்பெற்று, வைணவராகவே வாழ்ந்து வைகுண்
ட மடைந்தாரென்று, ஓர் வைணவப் பிராமணன் தெலுங்கப் பாஷையில் அ
வர் சரித்திரத்தை மொழிபெயர்த்துக் கொண்டு வாதிட்டால், நமது செட்டி
யார் நம்புவர் போலும்.

அவைபோல, பரமாத்வைத சித்தாந்தங்கைக்கொண்டொழுகிய தத்துவ
ஞானியாகிய சனகரை, மேற்கூறிய பண்டாரத்தாரும் இவரும் சைவதீக்ஷை
...த் துவித மதங்கொண்டொழுகிய சைவசித்தாந்தியெனப் புரட்டு
... பெயர்ப்புசெய்து வெளியிட்டால் உலகமொப்புமா? இவர்களுக்குத்

தானுய்வுண்டா? "தான் கெட்டதுமன்றிச் சந்திரபுஷ்கரணியையும் கெடுத்தான்" என்னும் பழமொழிக்கிணங்கப் பண்டாரத்தாருஞ் செட்டியாருங்கூடி, இப்புராணத்தை உலகத்தில் யாவரும் நம்பக்கூடாத புரட்டுநூலாகச்செய்து விட்டார்கள். இவ்வாறே யிவர் புரட்டிக்கெடுத்த புராணங்கள் சிலவுள! அவற்றை விரிப்பிற் பெருகும்.

நகரவைசிய நண்பர்காள்! சென்ற பங்குனி மாதம் இவரது "புரட்டுக்கடாவை விரட்டும் விடை" என்ற தனிப் பத்திரிகையிலே, இவரது புரட்டுத்தொழில் எம்மால் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றதன்றே? இவர் வெளியிடும் நூல்களெல்லாம் இவ்வாறே புரட்டு நூல்களேயாம். இந்தப்புரட்டுத் தொழிலைக் கற்றுக்கொள்ளத்தான், இவர் இத்துணைக்காலம் கல்வி பயின்றார்போலும். நியாய ஸ்தலத்திற் சாக்ஷியாகச் சென்று புரட்டுரைத்தாற்றானு புரட்டன்.

"கலந்தவர் தமைப்பிரித்துக் கலகங்கண் டிடவல்லானும்
புலந்தரு நூலினில்லாப் பொருளினைக் கூறுவானும்
நலந்தனை யழுக்காறெய்தி நகைத்திகழ் கிற்போன்றானும்
மெலிந்தவ ரிடத்துமிக்கவெகுளியைப் பெருக்குவானும்"

என்று சிவப்பிரகாச சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளியவாறு, இந்நூற் புரட்டு என்றுமழியாது இருமையினுந் துன்பம் பயக்குங் கொலையோடொக்கும் கொடுஞ் செய்கையாமே. முற்றுங் கற்றுணர்ந்தவரென்று புகழ்ந்து கொள்ளுமிவருக்கு, இது மகா பாதகமும் ஈனமும் நிறைந்த புன்செய்கையென்று தோன்றாததென்னே?

இனி, கச்சியப்ப பண்டாரத்தார் மொழிபெயர்த்தற்காதாரமான வடமொழி நூலில் விநாயகர் சணகருக்கு உபதேசித்தார் என்று கூறப்பட்டிருக்கலாம், அதனை வேதாந்திகள்தாம் மறைத்துவிட்டார்களென்று கொள்ளப்படாதோ? என்னின்:— ஒவ்வாது கூறினாய். மொழிபெயர்த்த பண்டாரத்தார் சமீபகாலத்துள்ளவர். இப்புராணமோ, பன்னெடுங்காலமாய் இமசேதுபரியந்தம் வடமொழி வழக்கிலிருந்து வருகிறது. அப்படி உபதேசஞ் செய்தாரென்னும் நூல் உலகத்தில் வழங்கக்காணோமே.

"நானுனென் றில்வாழ்வில் நண்ணியுழலாதே" என்ற நமதாண்டவரது சுவாநுபவத் திருவாக்கு இன்றும் ஏட்டிலும், புத்தகரூபமாயச்சிட்டும் நம்மவர்களால் அன்புடன் பாராயணம் பண்ணப் பெற்று, வழக்கத்திலிருக்க அதனை "நாம் பிரமம் என்று சொல்லி நண்ணியுழ லாதே" என்று புரட்டிக்கொண்டு, அதற்குத்தக்க பச்ச வசனங்களை யெழுதி வெளியிடுபவர், கொலையோடொக்கும், இவ்வித கொடுஞ் செய்கையைச் செய்யத் துணிவாரேயன்றி, ஏனையோர் செய்யவும் மாட்டார், செய்தாலும் அறிஞர்களாற்

கண்டிக்கப்பட்டு உண்மைப்பிரதியே வழங்குமென அறிக.

புராணிகராகிய பார்க்கவ முனிவர் வித்தியா பூஷண ராதலால், வேதவி ரோதமாய்ப் புராணஞ் செய்திருக்கவே மாட்டார். அதனால், வேதாந்திகள் மறைக்கவேண்டிய கவலையின்றென மறுக்க.

இவ்வாறு இவராற் செய்யப்படும் புனைசுருட்டு நூற்களைக் கண்டு மய ங்கி நமது நண்பர்கள் இவரது வஞ்சவலையி லகப்பட்டுப் பலவித பழி பாவங் களுக்காளாகாதிருக்கவும், இந்த அண்டப்புரட்டரையும் ஒருபொருட்படுத்தி "மாறுகொளக் கூறல், மற்றொன்று விரித்தல்." முதலிய பல குற்றங்களுக் குறைவிடமாய் விளங்கும் இத்தகைய புரட்டு நூற்களையும் அச்சிட இவருக் குப் பணவுதவிசெய்யும் பாக்கியவான்கள் இனியேனும் இவர் விஷயத்திற் கவனித்தொழுகவும், அவசரப் புத்தியாற், பலவாறு ஆராய்ச்சி புரியாது, க ண்டகண்டபடி நூற்களை யெழுதிப் பிறமதங்களைக் கண்டிக்கப் புகுந்து, இ னியேனும் இவர் இவ்வித அவமானமடையா தடங்கி நடக்கவும், இந்நூல் மிக்க வுபயோக மாகுமெனக்கருதி, யாவரும் உணரத்தக்க எளிய நடையி ல் இதனையெழுதி அச்சிட்டு வெளியிட்டேம்.

காரியதரிசி,
பிரமவித்தியாப் பிரசாரண சபை,
கோவிலூர்.

காலயுக்திஸு
சித்திரைமீ 31உ

உ

கணபதி துணை.

சற்குருப்யோநம:

காரைக்குடி.

ராம. சொ. சொக்கலிங்கச் செட்டியாரின்

# அவலமதி அழிவு.

(விநாயக புராணத்துள்ள தூர்வை யாசகப்படல ஆராய்ச்சி.)

---

கணபதிதுதி.

ஊருகி லிருந்தாலு முனைப்பணியா ருனக்கதிக வுவப்ப தான
ஓராறுகின் றிறம்பணியா ருத்தமமெய்ஞ் ஞானிகளை யுலகிற் றூற்றுஞ்
சீரறுபுல் லோரவல மதியழிவு கூறிடவென் சிந்தை மேவிப்
பேரருளைப் புரிவாய்முக் கண்ணுனை முகத்தானே! பிழையி லானே!

சற்குருஸ்துதி

தத்துவ ஞான சனகரைத் துவித சைவரென் றுரைத்திடக் கிளம்பிச்
சத்திய மணுவு மின்றிய புரட்டுச் சரித்திரம் புனைந்துசா திப்பார்
புத்தியி னவல மழிவுரைத் திடவென் புந்தியி னின்றருள் புரிவாய்
முத்திரா மப்பேர் சற்குரு மணியே! முனிவர்க டமதுகண் மணியே!

நடுநிலை பிறழா நண்பர்காள்!

புண்ணிய பூமியாகிய இப்பரதகண்டத்திலே, மனிதசென்மத்தைப் பெற்ற நாம்எல்லோரும், அனர்த்த நிவிர்த்தியும் ஆனந்தப்பிராப்தியும், ஆகிய மோக்ஷம் அடைவதற்கு முக்கியசாதனமாயுள்ளவை, வேதம்நான்கு, அங்கம் ஆறு, நியாயம்ஒன்று, மீமாஞ்சையொன்று, ஸ்மிருதியொன்று, புராணம் ஒன்று, ஆகப் பதினைந்து வித்தைகளேயாம். அவைகள், 'கருமம்பக்திஞானம்' என மூன்று காண்டங்களாக விளங்கும். அவற்றுள், கருமத்தை அநுட்டிப்போர் சொர்க்காதி பதவிகளையும், பக்திபுரிவோர் இஷ்டதேவதாலோகப் பிராப்தியையும், தத்துவஞான நெறிநிற்போர் நிரதிசயானந்த மோக்ஷத்தையும், அடைதற் குரியவராவார் என்பது ஆன்றோர்துணிவு. புண்ணிய கருமத்தால் பாவமும், ஈஸ்வரோபாசனையினுல் மன மொருமுகப்படாமையாகிய விக்ஷேபதோஷமும், நிவிர்த்தியாகவே தத்துவஞான முதிக்கும். ஆகையால், கருமமும் பக்தியும், தத்துவஞானத்திற்கு இன்றியமையாச் சாதனங்களெனத் துணியப்படும்.

இவ்வுண்மை யிவ்வாறு விளங்கிக்கொண்டிருக்க, நம்தமிழ்நாட்டில் சின்னாட்குமுன்னர் சைவசித்தாந்திகளெனப் பெயர்கட்டிக்கொண்டு, சில துவிதமத வாதிகள், வேதவழியை வெறுத் திகழ்ந்து, அத்துவித ஞானத்தைப்பற்றிப் பல ஆசங்கைகளைப் பத்திரிகைவாயிலாக வெளியிட்டு, வாதஞ் செய்யத் தொடங்கினார்கள்.

அவர்கள்செய்த துவிதமத துர்வாதங்கள், அவ்வப்போழ்து, சுருதி யுக்தியநுபவாநு சாரமாகத் தத்துவஞான விற்பனர் பலராற் சண்டிக்கப்பட்ட வரலாற்றை,— "1. தத்துவ வாதம். 2. ஸ்ரீ சங்கராசாரியார் அவதாரமகிமை. 3 வேதாந்த சங்கைநிவாரணம். 4. சித்தாந்திகளும் ஏகாத்ம வாதிகளே. 5. அத்வைத தூஷண பரிகாரம். 6. பதிபசுபாச வாதம், 7. துவித சைவரே மாயாவாதிகள். 8. மாயாவாத சைவ சண்டமாருதம். 9. திருவள்ளுவர் முதற்குறள். 10 அத்வைதஉண்மை. 11. பசு சச்சிதாநந்தமுடையதா? 12. அவைதிகசைவ சண்டமாருதம். 13. முடிவுரைச்சூறவளி. .14 பஞ்சதசப் பிரகரண ஆபாச விளக்கச் சண்டமாருதம். 15. துவிதாத்துவித வாதம். 16. துவிதசைவ மறுப்பு. 17. அத்வைத தூஷணநிக்கிரகம். 18. முதற்குறள் வாதம். 19. பேதவாத திரஸ்காரம் (யாழ்ப்பாணத்துச் சேந்திநாதையர் துர்வாதமறுப்பு) 20. திருமந்திர விசாரணை. 21. ஜீவான்மாவின் பரிமாணம். 22. அத்வைத விளக்கம் 23. வேதாந்த தீபிகை 24. முதற்குற ளுண்மை அல்லது முதற்குறள் வாத நிராகரணசததூஷணி 25. சங்கரத்துவேஷியார் வாப்பூட்டு முதற்பாகம். 26. ஷெஇரண்டாம் பாகம்." ஆகிய இவ்வளவு நூல்கள்§ இன்றும் விளக்கிக்கொண்டு நின்று நிலவுகின்றன. இஃதுலகப் பிரசித்தமேயாம்.

இஃதிங்ஙனமாக, நம் பாண்டிவளநாட்டிலே, காரைக்குடியிலே வசிக்கும், ராம. சொ. சொக்கலிங்கச் செட்டியாரென்பரொருவர், துவிதசைவ சித்தாந்தத்தை நிலைநிறுத்துவார்போல், அவலமகிகொண்டு வெளிக்கிளம்பி வேதாந்த விரோதமான புரட்டுநூல்கள் சிலவற்றை அச்சிட்டு, வெளியிட்டு வருகிறார் என்பது, அறிஞர்கள்பலரும் அறிந்ததேயாம்.

முன் வாதஞ்செய்த மதிவாணர்கள், " உலகம் சத்தா? அசத்தா? சுழுத்தியின்கண் உலகுண்டா? அத்துவிதிகள் யார்? வைதிகர் யார்? தாந்திரிகர் யார்? ஆஸ்திகர்யார்? நாஸ்திகர்யார்? மாயாவாதிகள் யார்? மாயையென்பதன் பொருள்யாது? சொற்பொருள் பேதாபேதமா? பதி, பசு பாசங்களில் வியாபித்த தென்பது, நீர் குடத்தில் வியாபித்ததுபோலா? நெய் எள்ளில் வியாபித்தது போலா? பழத்திற் சுவை வியாபித்ததுபோலா? பூவில் வாசனை வியாபித்ததுபோலா? மணி ஓசையில் வியாபித்ததுபோலா? கட்டையில்நெருப்புவியாபித்தது போலா? சதுர்ப்

§ இந்நூல்கள் சென்னை ரிப்பன் புத்தகசாலையில் விலைக்குக் கிடைக்கும்.

பூதத்தில் ஆகாயம் வியாபித்தது போலா? குடத்தில் மண் வியாபித்தது போலா? பாலில் நெய் வியாபித்தது போலா? கண்ணொளியில் சூரிய னொளி வியாபித்தது போலா? சூரியன் ஒளியில் வியாபித்தது போலா? கடல் நீரில் வியாபித்தது போலா? படிகம் பலவர்ணங்களில் வியாபித் ததுபோலா?" என இத்தகைய அளவிலடங்கா அரிய பெரிய நுண்ணிய விஷயங்களைச் சுட்டி வினவி, அவற்றிற்கேற்ற விடைகளை நியாயவாயிலாக வெளியிட்டு வந்தார்களென்பது, மேற்குறித்த துவித சைவகண்டன நூல் கள் பலவற்றால் நன்குவிளங்கும்.

நமது, சொ. செட்டியார்செய்யும் வாதங்களோ அவைபோன்றவை ய ல்ல என்பதற்கு, முகமொன்றும் அகமொன்றுமாக விளங்கும்படி யவரால் வெளிப்படுத்தப்பட்டிருக்கும், அபவாதமும், துர்வாதமும், வீண்வாதமும் நிரம்பிய பல புரட்டுநூல்களே போதியசான்றாம்.

எவ்வாறெனில், உலகத்தாருக்குச் சிவனடி யார்களின் மகிமையை வி ளக்கவந்ததுபோல் "உண்மை நாயன்மார் மகிமை" என்றபெயரையுடைய தாகக் காணப்படும் ஒருநூல். அது, வேதியர் தூஷணை, வேதாந்த தூஷ ணை, சங்கராசாரியர் தூஷணை, முதலிய பல தூஷணைகளைத் தன்னைப்படி ப்போருக்கு உபதேசிக்கத்தக்க மகிமையை யுட்கொண்டு விளங்குவதாயிருக் கும்.

மதுராபுரிச் சோமசுந்தரக்கடவுளைத் தோத்தரிக்கும் துதிபோல் "சோ மசுந்தரமாலை" என்னுஞ் சுந்தர முகமுடையதாகக் காணப்படும் ஒருநூல். அது ஜகத்குருவாகிய ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளை நிந்திக்கத்தக்க மந்திர ம் எவ்வளவு வேண்டுமோ, அவ்வளவு தூஷண மந்திரத்தையுந்தன்னைக் கற்போருக்குப் போதிக்கத்தக்க, பொய்யும் புரட்டும் நிறைந்த புனைசுருட்டு மாலையாக விளங்குவதாயிருக்கும்.

சகல வேதாந்தங்களின் சாரங்களைப் புகட்டவந்ததுபோல், "வேதாந் தம்" என்னும் பெயரையுடையதாகக் காணப்படும் ஒருநூல். அது, அவ் வேதாந்தங்கள் கூறும் அத்துவித முறை தவறித் துவித சைவசித்தாந்தப் போக்கை யுட்கொண்டு விளங்குவதா யிருக்கும்.

இவ்வாறே, இவரால் வெளியிடப்பட்ட நூல்கள்பல, வேததூஷணை வேதாந்ததூஷணை, வேதியர்தூஷணை, விஷ்ணுதூஷணை, சாதிதூஷணை சமயதூஷணை, சங்கராசாரியர்தூஷணை, முதலிய பலவித தூஷண மந்திர ங்களைச் செபிக்கும்படி, தம்மைப் படிப்போருக்கும் கேட்போருக்கும் நன்றா ய்ப்போதிக்கத் தக்கன என்பது அவற்றை யூன்றிவாசித்துணரும் நேயர்கள் ஒவ்வொருவரும் அறிந்து கொள்ளக் கூடியதேயாம்.

உலகத்திலே, கல்வி கேள்வியறிவில் வல்ல பெரியோர்கள், பஞ்சாக்ஷரம் அஷ்டாக்ஷரம் முதலிய மந்திரங்களை உருவேற்றும்படி, தம்மை யடுத்தவர்க

ளுக்கு உபதேசிப்பார்கள். இந்த லோகோபகாரியாகிய சொ. செட்டியாரோ மேற்காட்டிய பலவித நிந்தையா மந்திரங்களை யெந்தவிதமாகிலும் சிந்தையில் இடையறாது செபித்துக்கொண்டு, தம்மை யடுத்தவர்களுக்கும் உபதேசித் தழல்வதோடமையாமல், அவ் வவல மந்திரங்களைப் புத்தகவாயிலாகவும் உலகத்தில் வெளியிடத் துணிந்தார். இவரே நல்லொழுக்க நயந்தோர் பாருங்கள். இவர் கற்ற கல்வியின் பயன் இதுதான்.

இனி, ஈண்டு யாம் ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொண்ட இந்நூலோ, விநாயகக்கடவுளின் மகத்துவத்தையும், அவருக்கு அதிப்பிரியமான அறுகம்புல்லின் அற்புதத்தையும், அதனை அப்பெருமான் யாசித்த சரித்திரத்தையும், உலகத்தாருக்கு விளக்கவந்ததுபோல் "விநாயக புராணத்திலுள்ள தூர்வையாசகப்படலம்" என்னும் பெயரையுடையதாகக் காணப்படுகிறது. இது, சகலவேத சம்மதமாகிய அத்துவித மார்க்கம், வேத சிவாகமாதி சகல சாஸ்திர விரோதமான சர்வாபாச மார்க்கமெனவும், வேதாந்த நூல்களெல்லாஞ் சைவசித்தாந்த நூல்களே யெனவும், வேதாந்திகள் உலகத்தை யேமாற்ற விபூதி யுருத்திராக்கந் தரித்துக்கொண்டு, சிவாலயசேவை முதலிய சிவபணிகளை மேற்கொண் டொழுகுகிறார்க ளெனவும், வேதாந்திகள் உபநிடதங்களுக்குத் தப்பருத்தம் பண்ணுகிறார்க ளெனவும், சில உபநிடதங்கள் சிவேசுரசகத்து மித்தையெனக் கூறுகின்றன எனவும், அவ்வாறு கூறினும் அவற்றினுட்கருத்து வேறு எனவும், உபநிடதங்களின் ஒற்றுமை வேற்றுமை யெல்லாம் சிறுவருக்கும் விளங்குமெனவும், தத்துவ ஞானிகளைச் சமாதிவைக்காது நார்த்தொடுத்திழுத்து, நாய் நரிகள் தின்னுமாறு நாற்சந்தியிற் போடவேண்டும் எனவும், அதுவே திருவள்ளுவ நாயனார் முதலிய பெரியோர்கள் காட்டிய உண்மை வழியாகும் எனவும், ஒருவன் ஒரு பெண்ணை விவாகஞ் செய்துகொள்ளச் செய்யு முயற்சியும், பசியை நீக்கிக் கொள்ளச் செய்யும் சமயல் முதலிய செயல்களும் வியவகாரம் எனவும், உலகம் முக்காலத்தினும் அழியாத சத்தியமெனக் கொண்டு இறுமாப்புற்று அப்பெண்ணோடு புணர்ந்து அனுபவித்தலும், வயிரார வுண்டு உறங்குதலும், பரமார்த்தமாகிய பரமசுகமாகும் எனவும், தத்துவ ஞானி யாகிய ஸ்ரீ சனக மகாராஜா விநாயகக் கடவுளிடத்திற் சைவ தீக்ஷை பெற்று, ஆண்டானடிமைத் திறம் பேணிச் சைவ சித்தாந்தியாகவே வாழ்ந்தார் எனவும், அத்வைத பாஷ்ய கர்த்தராகிய ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள், நீலகண்ட சிவாசாரியரிடத்துச் சிவதீக்ஷை பெற்றுச் சைவ சித்தாந்தி யாகவே வாழ்ந்தார் எனவும், இவர் போலவே ஸ்ரீ வியாசர், ராமர், கிருஷ்ணர், அர்ச்சுனர், தத்துவராயர் சிவப்பிரகாசர், சிதம்பரசுவாமிகள், கோவிலூர் ஸ்ரீ ஆண்டவரென வழங்கும் முதறிராமலிங்க சுவாமிகள், துறவு சுவாமிகள், முதலிய யாவரும், பேதஞானங்கொண்டு விளங்கிய துவித சைவ சித்தாந்திகளே யெனவும்," தன்னுட்

பொதியப்பெற்றுத் தன்னைப் படிப்போருக்குங் கேட்போருக்கும், பலவித மாறுபட்ட மயக்குரைகளையும், பொய்யுரைகளையும், வீணாரவார வெற்றுரைகளையும், அறிஞர்கள் அருவருத்தொதுக்கத்தக்க அபவாத உரைகளையும் ஆபாச வுரைகளையும், அவல வுரைகளையும், போதித்துக் கொண்டு, வேதாந்திகளிடத்தும், கோவிலூர் மடாலய சாதுக்களிடத்தும், நகரவைசியர் முதலிய யாவருங் கொண்டுள்ள விசுவாசத்தைக் குறைப்பதற்கெனவே வெளிவந்ததாகக் காணப்படுகிறதே யொழிய, உள்ளபடியே "விநாயகக் கடவுளின் பெருமை யித்தகையது, அவரை அறுகம்புல்லாற் பூசிப்பதில் இவ்வளவு புண்ணியமுண்டு, அவ்வாறு பூசித்துப் பெருமையுற்றோர் சரித்திரம் இத்தன்மையது" என்று தன் தலைப்பெயரை விளக்க வந்ததாகக் காணப்படவில்லையென அதனை யூன்றி வாசிக்கும் அறிஞர்க ளனைவரும் அறியத்தக்கதேயாம் "வலியின் நிலைமையான் வல்லுருவம் பெற்றம், புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று" என்னும் பொய்யா மொழிக்கு இலக்கியம் வேண்டுவோர் கஷ்டமுறாமல், இச் சொ. செட்டியாரிடம் பரக்கக் காணலாம்.

"வெள்ளரிப் பழத்துக்கு வெள்ளிப்பூண் கட்டியவாறு," போல, வேதாந்திகளையும் கோவிலூர் மடாலயத்தையும்பற்றி யிழிவாக, இந்நூலின் முன்னும் பின்னும் இவர் கூட்டிப் புணைத்த பல பக்கவசனங்களை விரட்டி யோட்டத்தக்கவசனங்கள் ஸ்ரீ கோவிலூர் ஆதீனத்து -வீர- காசிகாநந்தசுவாமிகளவர்களால் தீட்டப்பட்டுள்ள இவரது "தூஷணநாவுக்கோர் சூடடுக்கோல்,, என்னும் நூலில் நீட்டிக் காட்டப்பட்டிருப்பதால், அவற்றை ஆண்டுக் கண்டு ஙாவடங்குவாராக!

## இந்நூற் பெயர்க்குக் காரணம்.

அத்துவிதக் கொள்கைகளை முறையே பூர்வபக்கஞ் செய்து, நியாயவாயிலாகத தருக்கித்துத் தமது துவித சைவ சித்தாந்த மதத்தை நிலை நிறுத்த வல்ல கல்வி யாற்றிலின்றிக் "கிளையைக் கைவிட்டு இலையைப் பற்றியவாறு" போல, அளவிறந்த வேதங்கள், உபநிடதங்கள், கீதைகள், ஸ்மிருதிகள், முதலியவற்றைப் பற்றாது புறக்கணித் திகழ்ந்து, பழங்கதைகளைப் பலபடக் கூறும் உபபுராணங்கள் ஒன்றிலுள்ள ஒரு சிறு சரித்திரத்தையும் உள்ளவாறு பற்றாது மாறுகொளப் பற்றியதால், இவரது மதி "அவலமதி" யெனவும், அவ்வீண்மதி கொண்டு மொழி பெயர்ப்பு நூலை யாதரித் தெழுதிய சரித்திரம், தன் மூல கிரந்தத்துக்கு முரண்பட்டு, அறிஞர்கள் ஆராய்ச்சிக்கு ஒவ்வாது விளங்குவதால் "அழிவுபாடடைதலையுடையது" எனவும் விளக்குவதால், இந்நூலுக்கு இவரது "அவலமதிஅழிவு" எனப் பெயரீந்தாம்.

இனி, இவர் எடுத்துக்காட்டும் புராணத்தைப் பற்றிச் "சமன் செய்து சீர்தூக்குங்கோல்போல்" நடுநிலை பிறழாது, ஒருவாறு ஆராயத் தொடங்குவாம்.

புராணம் என்பதன் பொருள் பழங்கதை அல்லது பண்டை வரலாறு என்பதாம். அது உலகத்தின் உற்பத்தி நாசங்களையும், மன்வந்தரங்களையும், பாரம்பரியங்களையும், பரம்பரைக் கதைகளையும், விளக்கிக் கூறுவதாகும். அது, பிரமம் முதலிய பதினெட்டாம். அவை, கழிந்த கற்பத்தின் கதைகளைக்கூறுவதில் ஒன்றுக்கொன்று முரணுற்றுப் பலவித வேற்றுமை யுடையனவாகக் காணப்படும். சில புராணங்கள் சிவனுக்குப் பரத்துவங் கூறும். சில விஷ்ணுவுக்குப் பரத்துவம்சொல்லும். சில பிரமனுக்குப் பரத்துவம்மொழியும். ஒன்று சூரியனுக்குப்பரத்துவம் பகரும். மற்றொன்று அக்கினிக்குப் பரத்துவங் கற்பிக்கும். இவ்வாறே யொன்றுக்கொன் றொவ்வாது மாறுகொளக்கூறும். விஷ்ணு முதலியவர்களுக்குப் பரத்துவங் கற்பித்துச் சிவபெருமானை யிழித்துக்கூறும் மகாபுராணங்களுக்கு, நமது செட்டியார் நடையசுத்தசைவம் கொஞ்சமும் ஒவ்வாது கீழிழியுமே! அவற்றிற்கு என்செய்வார்! பாவம்!

‘‘போனகம் பதினாலு புவனந் திருப்பள்ளி பொறியரா வணைப்பாற் கடல்
பூமடந் தையுநில மடந்தையுந் தேவியர் புராதன மறைக்கு மெட்டா
வானகம் பேரின்ப முடன்வீற் றிருக்குமிடம் வாகனம் வயின தேவன்
மலர்வந்தநான் முகன் றிருமைந்தன் அவன் மைந்தனீமதிசூடி வாசவன்முதற்
றேனகுந்தொடைமௌலிமுப்பத்துமுக்கோடிதேவநனதேவல்செய்வோர்’

‘‘மோடியோட வங்கிவெப்பு மங்கியோட ஐங்கரன்
முடுகிபோட முருகனோட முக்கணீசன் மக்களைத்
தேடிபோட வாணனேயி ரம்புயங்கள் குருதிநீர்
சிந்தியோட நேமிதொட்ட திருவரங்க ராசரே.’’

‘‘தேனந்து சோலை யரங்கேசர் சேவடி மேல்விசயன், தானந்த நாளையிற் சா
த்திய மாலையுந் தாள்விளக்கும், வானந் தருங்கங்கை நன்னீருஞ் சென்னியில்
வைக்கப்பெற்ற, ஆனந்தந் தானல்ல வோமுக்க ணன்மன்று ளாடுவதே’’

‘‘ விலையான திலையென்று நீதந்த முத்தம்
*வேப்தந்த முத்தாகில் வெற்றா வியப்பால்
இலையார் புனற்பள்ளி நாராய ணன்பால்
எந்தா யரங்கா விரங்கா யெனப்போய்த்
தலையா லிரக்கும் பணிப்பாய் சுமக்கும்
தன்றாதை யவர்தா மரைத்தாள் விளக்கும்
அலையாறு சூடும்பு ராணங்கள் பாடும்
ஆடும் பொடிப்பூசி யானந்தமாயே!’’ என,

இத்தகைய அளவிலடங்கா வைணவ சம்பந்தமான கதைகளால், நமது நண்பரது சிவ பரத்துவஞ் சிதைந்தோடத் தக்கதாமே! ஆகையால், புராணப்பிரமாணங் கொண்டு தத்துவ நிச்சயஞ்செய்யவந்த நமது செட்டியாரது மதியை அவலமதி யென்பதில் ஐயமென்னோ?

---

* வேய்தந்த முத்து—சிவபெருமான்

ஈண்டு யாம் ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொண்ட இப்புராணமோ, பிரமம் முதலிய மகா புராணங்களுள்ளு மொன்றன்று. அவற்றின் உபபுராணங்களுள் ஒன்றும். மகா புராணங்களே ஒன்றுக்கொன்று மாறுகொளக் கூறுமெனில், உப புராணக் கதைப்போக்கை யுரைப்பானேன், அமைக!

இப் புராணம் பிருகுமுனிவராலே செய்யப்பட்டதாலே அவ்வாக்கியோன் பெயர்கொண்டு "பார்க்கவ புராணம்" என வடமொழியிலே வழங்கப்பட்டு வருகிறது. இது, விநாயகக் கடவுளின் மகத்துவத்தையும், அவரை வழிபடு முறையையும், அவ்வழிபாட்டாற் பயனுற்றவர்களின் சரித்திரங்களையும், கூறுவதால், விநாயக புராணம் எனவும் வழங்கப்பெறும்.

இது, சென்ற நூற்றாண்டில் திருவாவடுதுறைப் பண்டாரத்துள் ஒருவரும் †தப்பை யொப்பெனறும் ஒப்பைத் தப்பென்றும் சாதிக்குமியல்புடையவரது பிரதம மாணாக்கரும், ஆகிய கச்சியப்ப பண்டாரத்தாரால், செந்தமிழ்ச் செய்யுள் வடிவாக மொழிபெயர்க்கப்பட்டுத் தமிழ்நாடெங்கும் வழங்கப்பட்டு வருகிறது. அச் செய்யுள் நடைக்கேற்ற வசனநடை நூல்களுங் காணப்படுகின்றன. இஃதிவ்வண்ணம் வழக்கத்திலிருக்க, நமது செட்டியார் நவீனமாக ஏதோ கண்டு வெளியிட்டதுபோல் "இதனை யெல்லாரும் எளிதிலுணர்ந் துய்க வென்றே வசனரூபமாக எழுதி வெளியிடநேர்ந்தது" எனப் பொய்க்காரணம் புனைந்து கூறிப் புலம்புவா ராயினர்.

வேதாந்த சாஸ்திரங்களையும், அவற்றின் வழியொழுகும் அறிஞர்களையும், கோவிலூர் மடாலயசாதுக்களையும், தூஷிப்பதற்காகவே இந்நூல் வெளியிடப்பட் டிருக்கிற தென்பதற்கு, யாவரும் விக்கின நிவிர்த்தியின் பொருட்டு வணங்குதற்குரிய மேன்மை யுடையவரும், தானெடுத்துக்கொண்ட நூலுக்கு ஏற்புடைக்கடவுளாய் விளங்குபவருமாகிய கணேசமூர்த்தியைக்குறித்த, ஒருவணக்கமுமின்றி, "இதில், நானே பிரமம் என்கின்ற ஏகாத்மவாதிகளால் துதிக்கப்பட்டசனகர்" என்று இந்நூல் வெகுபரபரப்பாய்த் தொடங்கப்பட்டு அவ்வாறே முடிவுசெய்யப்பட்டிருப்பதே, தக்ககாரணமாகும்" என்று, கற்றவரனைவரும் கரதலாமலகமெனக் கண்டுணரத் தக்கதேயாம்.

இனி, இவரது பொய்யையும், இவர் பற்றுக்கோடாகப்பற்றிய பண்டாரத்தார் புரட்டையும், உலகத்தார்யாவரும் வெளிப்படையா யுணர்ந்து, இவர்களை யெள்ளி நகையாடும் வண்ணம், பிருகுமுனிவர் வடமொழியில் அருளிச்செய்த கணேசபுராணத்துள்ள இச்சரித்திரத்தின் சுலோகங்களுக்கு நேரான மொழிபெயர்ப்பை உள்ளவாறு இதனடியில் எடுத்துக்காட்டி, அதன் பின்பு இவரும், இவர் பண்டாரத்தாரும் புனைந்துகூறும சரித்திரத்திலுள்ள வழூஉக் குழூஉக்களையுங் களைந்தொழிப்பாம்.

---

† இலக்கண விளக்கப் பதிப்புரை—பக்கம்-10.



உ
கணபதி துணை.

# கணேச புராணம்.

## உபாசனா காண்டம்.

65-வது அத்தியாயம்.

## *தூர்வை மகத்துவம்.

---

(§மூலகிரந்த சுலோகத்திற் கேற்ற மொழிபெயர்ப்பு)

சுக சொரூபமாய் விளங்கும் கணேசமூர்த்தியைத் தரிசிக்கவேண்டுமென்று நீண்ட நாளாய் அன்பு கொண்டிருந்த நாரதமுனிவர், ஒரு சமயத்தில் அப்பெருமானை யடைந்து, சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து எழுந்து, சிரமேற் கரங்கூப்பி, "புண்ணிய மிகுதியால் தங்கள் தரிசனம் இன்று எனக்கு நேர்ந்ததாலே என் பிறப்புப் பயனுற்றது" என்று துதித்து நின்றார். கணேசப் பெருமான் அம் முனிவரைக் கரத்தைப்பிடித்து ஆசனத்திலிருக்கச் செய்ய அம்முனிவர் கணேசரைப் பார்த்து, "எம்பெருமானே! என் மனத்திற் குடிகொண்டுள்ள ஓர் ஆச்சரிய காரியத்தைத் தங்களிடந் தெரிவிக்க வந்தேன். தெரிவித்துத் தங்களை நமஸ்கரித்துச் செல்ல சித்தமாயிருக்கிறேன்." என விண்ணப்பித்து நிற்க, கணேசர் "உம்மாற் காணப்பட்ட அதிசயம் யாது? அதனைத் தெரிவித்து உமது ஆச்சிரமத்திற்குச் செல்லும்" என்று சொல்ல நாரத முனிவர் "ஓ தேவா! மிதுலாபுரியை அரசு புரியும் மன்னர்மன்னனாகிய ஜனகன், அதி மானியாயும், தியாகியாயும், வேதவேதாங்கங்களைக் கரை கண்டுணர்ந்தவனாயும், அன்னதானத்தில் மிக்க விருப்புள்ளவனாயும், பலவித வஸ்திராலங்காரங்களாலும் தக்ஷிணைகளாலும், பிராமணர்களை நாடோறும் உபசரிப்பவனாயும், ஏழைகள் குருடர்கள் முதலிய யாவரும் வேண்டியவைகளை வரையாது கொடுக்கும் வள்ளலாயும் வாழ்ந்திருந்தான். அவ்விதந்

---

* அறுகம்புல்லின் அற்புதம்.

§ இவ்விடத்துள்ள அச்சுக்கூடங்களில் வடமொழியெழுத்து இல்லாக் குறையால், மூலகிரந்த சுலோகங்களை அச்சிடவியலாதாயிற்று

கொடுத்தும், அவன் திரவியங்குறையாது, மேன்மேலும் விருத்தியடைவதைக் கண்ணுற்றுத் தேவரீரது பிரசாதத்தா லிவ்வண்ணமிருக்கலாமென்று கருதி, அவ் வதிசயத்தைக்காண, அம் மகாராஜனது அரண்மனையை யடைந்தேன். அக்காலை அம்மன்னன் தனது பிரம ஞாநாபிமானத்தால், என்னைப் பார்த்து மிகவுஞ் சிரிக்க அதனைக்கண்டு, மன்னனே! "கணேசரது பக்தியால் உனது எண்ணங் கை கூடுவதால் நீ மிகவுந் தன்னியன்" என்று கூறினேன். அதனைக் கேட்ட சனகன் "ஓ! முனிசிரேஷ்ட! மூவுலகத்தினும் கொடுப்பவனும், அநுபவிப்பவனும், ரக்ஷிப்பவனும், கொடுக்கச் செய்கிறவனும் நானே! எனது சொரூபத்தைத்தவிர வேறொன்றும் உலகிலில்லை நானே கர்த்தா! நானே காரணன்! நானே கரணன்!" என்று கூறினான். இவ்வித அவனது வசனத்தைக்கேட்டுக் கோபங்கொண்டு, "ஏ! பரிசுத்தகுணமுள்ள ராஜனே! ஈஸ்வரனைத் தவிர செகத் கர்த்தா வேறில்லை. நீ டம்பமாகத் தருமத்தைச் செய்கிறாய் என்று கருதுகிறேன். கொஞ்சகாலத்துள் இதற்கு உனக்குச் சாக்ஷியத்தைக் காட்டுகிறேன்." என்று சொல்லிவிட்டு, ஈண்டுத் தங்கள் சமுகத்தை யடைந்தேன்." என்று விண்ணப்பித்து நின்றார். அதனைக் கேட்ட கணேசப் பிரபு, அம் முனிவரை அர்க்கியாதிகளாலும் அலங்காராதி வஸ்துக்களாலும், சந்தன புஷ்பாதிகளாலும், உபசரிக்க, அம் முனிபுங்கவர் விநாயகரிடம் விடைபெற்றுக் கொண்டு விஷ்ணுவைத் தெரிசிக்க வைகுண்டலோகஞ் சென்றார்.

பின்பு, எல்லாம் அறியவல்ல கணேசமூர்த்தி, ஜனகராஜன் பக்தியைப் பரிசோதிப்பான் திருவுளங்கொண்டு, பார்த்தோர் அருவருக்குமாறு ஈக்களால் மொய்க்கப்பட்ட ரத்தப் பெருக்கைக் காலும் எண்ணிறந்த புண்களையுடைய தொழுநோயாளராய பிராமண வடிவங்கொண்டு, மிதிலாபுரி வீதியிலே சிறுபிள்ளைகள் சூழ்ந்துவர, நடைதளர்ந்தும் இடறிவீழ்ந்தும், மெய்ம்மறந்தும் செல்லக் கண்ட ஜனங்களிற் சிலர், அவரது அமங்கலத்தைக் கண்டு சகியாமல், வஸ்திரத்தால் தங்கள் முகத்தை மூடிக்கொண்டும், சிலர் மூக்கைப் பிடித்துக்கொண்டும், சிலர் காறியுமிழ்ந்து நின்றும், இழிந்துரையாடினார்கள். அவ்வாறு சென்ற பிராமண வடிவுடைய கணேசப் பெருமான், சனகரது அரண்மனை வாயிலையடைந்து, காவலாளரை நோக்கி "மிக்க பசியுடைய ஓர் வயோதிகப் பிராமணர் வேண்டியபோஜனம் விரும்பி அதிதியாக வந்திருக்கிறார்" என்று உங்களரசனிடம் தெரிவியுங்க ளென்றார். அவ்வாறே தெரிவித்த தூதர்களின் வசனத்தைக் கேட்ட மாத்திரத்தில், சனகர் மிக்க சந்தோஷ சித்தராய், அப் பிராமணரை உடனே யழைத்து வாருங்கள் என்று கூற, தூதர்களும் அழுக்கான கந்தையுடையராகிய அப் பிரமணரை அரசனிடம் சேர்த்தார்கள்.

ஈக்களால் மொய்க்கப்பட்ட ரத்தப்பெருக்கையும், வியர்வை நீரையுமுடைய, அவ் வயோதிகப் பிராமணரைத் தரிசித்த காலையில், சனகர்,

“நம்மையாளும் பரமேச்சுரன் அடியேனைப் பரிசோதிப்பான் கருதி இப்படிவங்கொண் டணைந்தனரோ? எளியேனைப் புண்ணியத்தினின்றுஞ் சலிக்கச் செய்ய இவ்வேடம் பூண்டுவந்தனரோ? அடியேனுக்குப் புண்ணிய மிருந்திருப்பின், இவரது மனதைத் திருப்திசெய்யவல்லவனுவேன். வருவது வேறுபடாது.” யென்று பலவாறு ஆலோசித்துக் கொண்டிருக்க, பிராமண வடிவங்கொண்ட கணேசர், “ஓ! அரசனே! சந்திரகிரணம்போல் நிர்மலமான உனது கீர்த்தியைக் கேட்டுப் பசியால் வாடிவந்த எனக்குத் திருப்தியுண்டாகும் வரையில், அன்னம் அளிப்பாயாக! அநேக யாகபலன் உனக்குண்டாகும்” என்று கூறியருளினர். அவரது வசனங்களைக் கேட்ட சனகர், கிரகமத்தியில் அவரையழைத்து ஆசனத்திலமர்த்தி, விதிதவறாது பூஜித்து, அறுசுவை நிரம்பிய அன்னத்தைப் பரிமாறினர். கணேசராகிய பிராமண சிரேஷ்டர் அவ் வன்னத்தை யெல்லாம் ஒரே கவளமாயுண்டு, மேலுமுணவை விரும்ப, முப்பதினாயிரம் பேர்களுக்குப் பாகஞ்செய்திருந்த அன்னத்தை யெல்லாம் கொண்டுவந்து படைக்க, அதனையும் ஒரே கவளமாயுண்ண, பின்பு மலைமலையாக அன்னத்தைப் பாகஞ்செய்து படைக்க, அவற்றையெல்லாம் ஒரே நொடியில் உண்டருளினர். அதனைக் கண்ட ஜனங்கள், “இவன் இராட்சதனாயிருக்கவேண்டும். இவனுக்கேன் அன்னமளிக்கவேண்டும்? இராட்சதனுக்கு அன்னமிடுவதிற் கொஞ்சமும் புண்ணியமில்லை. மூவுலகத்தையு முண்டாலும், இவனுக்குத் திருப்தியுண்டாகாது. ஆனதால் தானியங்களையே இவனுக்குக் கொடுக்கலாம்.” என்று பற்பலவாறு கூறக்கேட்ட சனகர், தனது நாடு நகரம் கிராமம் முதலிய இடங்களிலுள்ள சகலவித தானியங்களையும், கொணர்வித்துப் படைக்க, அவற்றை யெல்லாம் புசித்தும், அவ்வதிதிக்குத் திருப்தியுண் டாகாததைப் பார்த்துத் தூதர்கள், “தானியம் இனியொருவிடத்திலும் கிடைத்தற் கிடமில்லையே!” யென்று ராஜனிடந் தெரிவிக்க, அதனைக்கேட்ட ராஜன் தலைகுனிந்து மௌனமாயிருக்க, அதிதியாகவந்த கணேசர் ‘அரசனே! நீ க்ஷேமமாயிருப்பாயாக!’ என்று ஆசீர்வதித்து, வீடுகடோறுஞ்சென்று, பிக்ஷையேற்று நிற்க, அவ்வீட்டிலுள்ளவர்கள், “எங்களிடமிருந்த வுணவுப் பொருள்களெல்லாம் சனகரால் உமக்கே படைக்கப்பட்டன. இனி எங்களிடமொன்றுமில்லை. உமது இஷ்டப்படி செல்லலாம்” என்று சொல்ல, பிராமணராகிய கணேசர் “சனகனைப் பார்க்கிலுந் தாதா வேறு யாருமில்லை யென்று கேள்வியுற்று, அவனையடுத்தும் திருப்தியடையாதவனாயினேன். இனி யெவ்விடஞ் செல்வேன்?” என்று சொல்ல, அதனைக்கேட்ட ஜனங்கள் மறுமொழிகூற வியலாது மௌனமாயிருந்தார்கள்.

பின்பு, அதிதி யுருக்கொண்ட பிராமணர், அவ்விடத்தினின்று நீங்கிக், கணேசரை யிடையறாது பத்திரபுஷ்பங்களால், அருச்சித்து, அநன்னிய பக்தியோடும் பூஜிப்பவர்களும், மிக்கவறுமை யுடையவர்களும், ஆகிய

"விரோசனை, திரிசிரசு" என்னும் பிராமண தம்பதிகளுடைய, மேற்கூரையின்றி, ஈக்களாலுங் கொசுக்களாலும் மொய்க்கப்பட்டுள்ள சிறு குடிசையையடைந்து, அவர்களை நோக்கி, "மிதிலையரசனுடைய கீர்த்தியைக்கேட்டு, மிக்க பசியுடன் வந்தேன். அவன் எனக்குத் திருப்தி செய்விக்க வில்லை. டம்பமாகத் தர்மஞ் செய்பவனைக் காணப்படுகிறானே யொழிய, சத்துவகுண மவனிடமில்லை. ஆனதால் எனக்குத் திருப்தி செய்யக் கூடியவை யேதேனும் நமது கிரகத்திலிருந்தாற் கொடுங்கள்" என்று சொல்ல, அதனைக்கேட்ட அப்பிராமண தம்பதிகள் "சக்கரவர்த்தியாகிய சனகரால் திருப்தியடையாத தாங்கள், அஷ்டதரித்திரர்களாகிய, எங்களால் எவ்வாறு திருப்தியடையக்கூடும்? நதி நதங்களால் பூர்த்தியடையாத சமுத்திரம், ஒரு சிறு துளியாலோபூர்த்தியடையும்?" என்று சொன்னார்கள். அதனைக் கேட்ட அதிதியானவர் "பக்தியாற் கொடுக்கப் பட்டது அணுவானாலும் அது எனக்கு அதிக திருப்தியை யுண்டுபண்ணும். பக்தியில்லாமலும் நானென்ற அகங்காரத்தோடும் மிகுதியாய்க்கொடுத்தாலும, அது வீணாகும்," என்று கூற, அதனைக் கேட்ட தம்பதிகள். "எங்கள் வீட்டில் பிரமாணமாயொன்றுமில்லை, காலையில் கணேசருக்குப்பூஜை செய்து, ஒரு அறுகம் புல்தான் மிஞ்சியிருக்கிறது." என்று சொன்னார்கள். அதற்கு அக்கணேசப்பிராமணர் பக்தியோடு கொடுக்கப்படுவது ஒன்றானாலும் அது எனக்கு அதிப்பிரியத்தை யுண்டாக்கும்' என்று சொல்ல, உடனே 'விரோசனை' என்னும் அவ்வம்மையார், அப்பிராமணரின் வசனத்தைக் கேட்டு, அந்த ஒரு தூர்வையை மிக்கபிரியத்துடன் அவருக்குக்கொடுக்க, அதனால் அவர் பூரணதிருப்தியடைந்தார். சம்பாவன்னம், பாயசான்னம், முதலியசகலவித வர்க்கான்னங்களும், நானா விதமான கறிபதார்த்தங்களும், இன்னும், பலவினிய ஆகாரங்களும், அவ்விரோசனை யம்மையால், அத்தூர்வையிலுண்டுபண்ண, அவைகளை அக்கணேசப்பிராமணர் புசித்துத் திருப்தியடைந்து, அக்கணமே, இழிவான தனது வேடத்தை மாற்றி, யானைமுகமும் செந்தாமரைக் கண்களும், மாலையும் மழுவும் தாமரையும் ஒற்றைத்தந்தமும் தாங்கிய சதுர்ப்புஜங்களும், மணிமுடி தரித்தசிரசும், குண்டலங்களணிந்த திருச்செவிகளும், மறைச்சிலம் பொலிக்கும் திருவடிகளும், உடைய, தனது யதார்த்த சொரூபத்தைக் காட்டியருளி, அன்புடையோர்களே! "நீங்கள் விரும்பும் வரத்தைக்கேட்டுப்பெற்றுக் கொள்ளுங்கள்." என்று திருவாய் மலர்ந்தருளினார், அதனைக் கண்ட அத்தம்பதிகள் ஆனந்தங் கொண்டு, "எம்பெருமானே! யாங்கள் எந்த சன்மத்தை யடைந்தாலும், உமது திருவடியில் ஸ்திரமான பக்தியுடையவர்களாக வேண்டும். அல்லது இந்தச் சம்சாரசாகரத்தினின்றும் யாங்கள் கரையேறி யரிய முத்தியையடையத்திருவருள் புரிய வேண்டும்" இவையன்றி அடியேங்களுக்கு வேண்டும் வரம் வேறொன்றுமில்லை" என்று துதித்து நின்றார்கள். வேண்டுவார் வேண்டிய வா

றே யருள்புரியும், கருணாநிதியாகிய கணேசப் பெருமான், இவ்வாறு அப் பிராமண தம்பதிகள் கூறியவாக்கியத்தைக்கேட்டு, அநுக்கிரகித்து அவர்களை க்கட்டித்தழுவி அந்தர்த்தான மாயினர். ஆகையால், அறுகம்புல்லாற் கணேச மூர்த்தியை நாடோறுந் தவறாது அன்புடன் அருச்சித்துப் பூஜிப்பவர்கள், சகல இஷ்டசித்திகளையும் பெற்று இருமையினும் இன்புற்று வாழத்தக்க வர் களாவார்கள். சுபம்.

தூர்வை மகத்துவம் முற்றிற்று.



அன்பர்காள்!

நூலாசிரியரது உள்ளக்கிடை யிவ்விடத்திலிவ்வாறுமென ஆழயோசித்து, அவ்விடத்து அவ்வாறே மொழிபெயர்க்கும் விரதம் பூண்டவரே மொழிபெயர்ப்பு ஆசிரியர் எனப்படுவார். அவவாறின்றி, ஆசிரியர் கருத்துக்கு மாறாகத் தமது கருத்தை யிடையிற் புணர்த்து மொழிபெயர்ப்பவர் புரட்டரேயாவர்.

இப்புராணத்துள்ள இப்பகுதி, ஆதிமத்தியாந்த ரகிதராய், அருவராய்' ஆனந்த சொருபராய், பரிபூரணராய், பாவனைக் கெட்டாதவராய், பரம ஞானிகளது துரிய நிஷ்டாநுசந்தான நின்மல மனமே சிர்த்தமிடும் இடமாகக் கொண்டு விளங்குபவராய், தன்னிடத்து அன்புள்ளவர் கொடுக்கும் ஒரு அற்பப்புல்லையும், சகலாண்டபுவனமும் புல்லென மதிக்கத்தக்க, தன்னுதராக்கினிக்கு அமிர்தாகக் கொடுத்து, அவரை யாதரிக்கும் அன்புள்ள வராய் விளங்கும், விநாயகக் கடவுளுக்குரிய பூஜாதிரவியங்கள் பலவற்றுள் ஒன்றாகிய, எழுவகைப் பிறவிகளுள் மிக்கஇழிந்த பிறப்பையுடைய ஒரு சிறு அறுகம்புல், இவ்வளவு மகத்துவமுடையதெனவும், அதனை அப்பெருமான் யாசித்த சரித்திரத்தைச் சொல்லும் பகுதி யிதுவெனவும், விளக்கவந்ததென்பது, அதற் கிடப்பட்டிருக்கும் பெயரால் நன்கு விளங்கும். இதனால், தன்னிடத்து அன்புள்ளவர் கொடுக்கும் அணுவையும், அண்டமாகக் கொண்டு, அவர்பால் அமர்ந்து இனிது விளங்குபவர் அக்கணேச மூர்த்தி யென்பது துணியப்படும்.

நமது செட்டியர்ரோ, இப்பட்லத்தில், "நானே பிரமம் என்னும் மார்க்கம் வேத சிவாகமாதி சகல சாஸ்திர விரோதமான சர்வாபாசமார்க்கம் எனவும், நாரதபகவான் வேண்டுகோளால் சனகரிடம் விநாயகப்பெருமான் எழுந்தருளி யவருக்குச் சைவசித்தாந்த மார்க்கத்தைப்போதித்தார் எனவும், அச்சனகரும் முன்கொண்ட மார்க்கம் மூடமார்க்கமே யெனத்தெளிந்து, அதனை யடியோடு தொலைத்து விட்டுச் சைவசித்தாந்த சன்மார்க்கமேமேற்கோண்டு சிவஞானியாயிருந்து உலகாண்டார் எனவும்" விளங்குகின்றனஎன்றார்.

விநாயகப் பெருமான் சனகருக்குச் சைவ சித்தாந்த போதனைசெய்திருந்தாலன்றோ, அத்துவித மார்க்கம் ஆபாச மார்க்க மென்றும், மூடமார்க்க மென்றும், துவிதமார்க்கம் சுகமார்க்கமென்றும் துணியப்படும்.

நண்பர்காள்! கவனியுங்கள். கணேசப் பெருமான், சனகமகாராஜனுக்குச் சைவ சித்தாந்தத்தைப் போதிக்க வந்த படலமாயிருப்பின், இது, "சனகன் உபதேசம் பெறு படலம். சனகனுக்குச் சைவசித்தாந்த வுண்மை தெளிவித்த படலம் சனகனுக்குப் பதி பசு பாச நிர்ணயம் பாலித்தபடலம். சனகனுக்கு ஆண்டா னடிமைத்திறம் அருளிச் செய்த படலம்." என, இத்தகைய பெயர்களில் ஏதேனும் ஒன்றைப் பெற்று விளங்கும் பெருமையுடையதாகும். நூலாசிரிய ராகிய பார்க்கவமுனிவர், பக்தியை விசேஷிக்கத் தொடங்கித் தூர்வை மகத்துவம் கூறும் பாகத்தில், இவரும் இவர்பண்டாரத்தாரும் துவித மகத்துவத்தைப் புனைந்து சாதிக்கும் துவேஷிகளாகக் காணப்படுகிறார்களன்றோ?

நூலாசிரியர் கருத்து, "அத்துவிதம் பொய் துவிதமேமெய்" என்று சாதிக்க வந்த நமது செட்டியாரின் அவலமதியைப் போன்றதன்று என்பது வெள்ளிடையாம்.

என்னை? மேற்காட்டிய இப்பகுதியின் மூல கிரந்தசுலோகார்த்தத்தில் "விநாயகக் கடவுள் சனகமகா ராஜனுக்குச் சைவசித்தாந்த போதனை செய்தார்" எனக்கொஞ்ச மேனுங்காணப்படுகிறதா? அற்பமும் இல்லையே! அணுவும் இல்லையே!! இதனால், இந்நூலை மொழிபெயர்த்த பண்டாரத்தார் புரட்டு இற்றென வெளியாயிற்றன்றே!

"ஸனகர் சனந்தனர் சனாதனர் சனற்குமாரர் என்னும் பிரம புத்திரர்கள் நால்வர், சனகமகாராஜன், சுகர், நாரதர், வாமதேவர், வியாசர், துருவாசர், கௌதமர், வசிட்டர், சடபரதர், முதலிய பெரியோர்களெல்லாம், பேத ஞானமின்றி வித்தியாவரம்பிற் கட்டுப்பட் டொழுகிய பிரமநிஷ்டாநுபூதி மகான்கள்" என, அளவிறந்த பிரபல சுருதிகள் முறையிடுகின்றன. அவற்றை யெல்லாம் புறக்கணித்திகழ்ந்து, பழங்கதைகளைப் பலபடக் கூறும் உபபுராணங்கள் ஒன்றிலுள்ள இந்த ஒரு சிறு மாறுபட்ட சரித்திரத்தைக் கொண்டு, சனகமகாராஜன் துவிதமதங் கொண்டொழுகிய சைவ சித்தாந்தியென எவ்வாறு துணியக்கூடும்.

பிருகுமுனிவருடைய வாக்கியத்தைப் பிரமாணமாகக் கொள்ள நேரின், அவராற் செய்யப்பட்டுள்ள மற்றைய கிரந்தங்களையும், அவருடைய கொள்கைகளைக் கூறும் பிறநூல்களையும் நாம்சீர்தூக்கிப் பார்க்க வேண்டும். அம்முனிசிரேஷ்டராற் கூறப்பட்டுள்ள, "மநுதர்ம சாஸ்திரப் பிருகு சங்கிதை" யில்:—

"சகல வேத புராணங்களினாலே பிரசித்தராயும், இந்திரியங்களுக்கு

விஷய மாகாதவராயும், உருவ மில்லாதவராயும், சர்வாந்திரியாமியாயும்,... ......இருக்கின்ற சுவாமி யாரோ, அவரே, இந்த ஆகாய முதலிய பூதங்களாகப் பிரகாசித்தார்."

"பிரபஞ்சத்துக்குக் காரணராயும், சரீரமில்லாதவராயும், அழிவில்லாதவராயும், வேதாந்தத்தினாலே அறியப்படும் சுபாவமுடையவராயு மிருப்பவர் அப்பரமாத்மா."

"பிறப்பிறப்பற்ற கடவுளாகிய காரணத்தினின்றும், அழிவுள்ள இந்த வுலகமாகிய காரியம் உண்டாகின்றது."

"மனிதர்களுயர்ந்தவர். அவர்களினும் வேதமோதும் அந்தணர்கள் உயர்ந்தவர், அவர்களினும் விதிவிலக்குகளை நிச்சயமா யறிந்தவருயர்ந்தவர்,... .........அவர்களினும் விருப்பு வெறுப்பின்றி பிரமத்தை யறியும் ஞானிகளே உயர்ந்தவர்."

"மோக்ஷ மார்க்கமான ஆத்ம ஞானத்தையும்........வேதங்களை மேற்கொள்ளாத பாஷண்டர்களின் ஒழுக்கத்தையும் உங்களுக்குச் சொல்கிறேன்."

"மேலான பரமாத்ம ஞானமாகிற தர்மத்தை யறியும் பொருட்டு, சகத்துக்குக் காரணமாகிய பிரம சொரூபத்தை முதலத்தியாயத்திற் சொல்லி, அதற் குறுப்பாகிய சாதகர்மத்தைச் சொல்லத் தொடங்கினர்."

"வேதத்தையும் ஸ்மிருதியையும் எவன் தர்க்கசாஸ்திர யுக்தியினால் அவமானஞ் செய்கிறானோ, அவன் பெரியோர்களால் நீக்கத் தக்கவனாவான் வேதத்தை நிந்திப்பதால் தெய்வமில்லையென்று சொல்லும் நாஸ்திகனும் ஆவான்."

"நற்கதி யடையும் பொருட்டு, வேதாந்த, மகாவாக்கியங்களால் பிரமத்தைத் தியானித்துக்கொண் டிருக்கவேண்டியது."

"பிரமஞானத்தினால் உண்டாவது அழிவற்ற மோக்ஷ சுகம்."

"பிரமசாக்ஷாத்காரஞ் செய்தவனைக் கர்ம பந்தம் அணுகா. அஃதாவது சனன மரண ரூபமான சம்சார சாகரத்தில் துன்பப்பட மாட்டான் என்பது கருத்து. பிரமத் தியான மில்லா விட்டால் மறுபடியும் சனன மரணத்தை யடைகிறான்."

"பிரமஞானி யானவன் தன் இஷ்டர்களிடத்தில் தன் புண்ணியத்தையும், தன் துவேஷிகளிடத்தில் தன் பாவத்தையும், விட்டுவிட்டு, அழிவற்ற பிரமானந்தத்தை யடைகிறான்."

"எப்போது பிரமத் தியானத்தினால், தோஷத்தை யுண்டு பண்ணுகிறதான சகல விஷயங்களிலும், ஆசையை நீக்குகிறானோ, அப்போது இம்மையிலும் மறுமையிலும், அழிவற்ற சுகத்தை யடைகிறன்,"

"மமதையை விடுகிறது முதலியவை யெல்லாம், பிரமத் தியானஞ் செய்பவனுக்கு மாத்திரம் பலனைக் கொடுக்குமே யொழிய, ஆத்மத்தியா

னம் இல்லாதவனுக்கு ஒருகருமமும் பலனைக் கொடுக்காது."

"சன்னியாசி வேதாந்த வாக்கியத்தால், பிரம சொருபத்தை யெப்போதும் தியானிக்க வேண்டியது."

"வேதாந்த மானது அதன் பொருள் தெரியாமல் ஓதுகிறவனையுங் காப்பாற்றுகிறது. அதன் பொருள் அறிந்தவர்களை விசேஷமாகக் காப்பாற்றுகிறது. மோக்ஷத்தை விரும்பினவர்களுக்கு இந்த வேதாந்தந்தான் கதியாக இருக்கிறது."

"வேதாந்தங்களைப் பொருளுடன் அப்பியஸிப்பது, பிரம சொருபத்தை யறிவது.........இவைகள்தாம் மோக்ஷத்துக்கு மேலான சாதனங்கள்."

"சகலமான சுபகருமங்களுக்குள் வேதாந்த வாக்கியத்தினால் வருகிற ஆத்மஞானமே மேலானது. ஏனென்றால், அது எல்லா வித்தைகளுக்கும் மேலானதல்லவா? ஆகையினால், அவ்வேதாந்தத்தினாலேயே மோக்ஷமுண்டாகிறது."

"பிரம காண்டத்தினால் மோக்ஷ ஹேதுவான ஆத்ம விசாரம் பண்"

"வேதத்தில் விதிக்கப்பட்ட அக்கினிஹோத்திரம் முதலிய கருமங்களை விட்டாவது பிரமத்தியானத்திலும், இந்திரியநிக்கிரகத்திலும், வேதாந்த விசாரத்திலும் முயற்சிக்க வேண்டியது."

"பிரமத்தியானமே யனைவருக்கும் சனனம் எடுத்ததற்குப் பலனைக் கொடுக்கும், இதை யநுட்டித்தால் மாத்திரங் கிருத கிருத்தியர்கள் ஆவார்களே யொழிய வேறொரு கருமத்தாலு மாகார்."

"எந்த ஸ்மிருதிகள் வேதார்த்தத்துக்கு விரோதமாயிருக்கின்றனவோ, அவைகள் நல்லபலனைத் தராதவைகளேயாம்."

"வேதத்திற்கு விரோதமாக யாதொரு சாஸ்திரங்கள் ஒருவரால் உண்டுபண்ணப் படுகின்றனவோ, அவைகளெல்லாம் சீக்கிரத்தில் அழிந்து போகும். ஏனென்றால், அவைகளுக்கு வேதமூலமான பிரமாண மில்லாததால், சுத்தப் புரட்டு நூல்களே யாம்."

"எல்லாப் பதார்த்தமும் பரமாத்மாவிடத்தில் வாசஞ் செய்கிறதாகத் தியானித்துப், பிரம சாக்ஷாத்காரஞ் செய்கிறவன், அதர்மத்தில் மனத்தை வைக்கமாட்டான். ஏனெனில், எல்லாம் பிரமசொருபம் என்று அறிந்திருக்கிறபடியால்."

என இவ்வாறு வேதவேதாந்தங்களின் பெருமை யிவ்வளவெனவும், வேதத்திற் கிணையாக மற்றோர் நூலைக்கொள்பவர் நாஸ்திகர் எனவும், சகல பிரபஞ்சத்திற்கும் பிரமமே காரணம் எனவும், பிரமமே ஆகாயமுதலிய பூதங்களாக விரிந்திருக்கிறதெனவும், பிரபஞ்சம் அழிவுடையதெனவும், பிரமஞான முற்ற பெரியோரே யாவரினும் உயர்ந்தோர் எனவும், பிரம ஞா

னத்தை யிழித்துரைப்பவர் பாஷண்டிகளெனவும், மோக்ஷத்திற் குரியமார்க்கம் ஆத்ம ஞான மார்க்கம் ஒன்றே யெனவும், மோக்ஷம டைதந்துவேதாந்தநூல்களே கதிபாக விளங்குகின்றன எனவும், வேதாந்தமே பிரம சாக்ஷாத்காரம் பெறுவிக்கும் நூல் எனவும், மற்றவைகள் மயக்க நூல்களெனவும், பிரமஞானமுள்ளவரிடத்துக் கருமபந்தம் அணுகாதெனவும், பிரமஞானிகளே சம்சார சாகரத்தைத் தாண்டவல்லவ ராவார் எனவும், ஆத்ம ஞானமில்லாதவனுக்கு ஒரு கருமமும் பலனைக் கொடுக்கா தெனவும், வேதாந்த நூல்களை அப்பியசித்தலும், பிரமத் தியானஞ் செய்தலுமே மோக்ஷ சாதனங்கள் எனவும், வேத விரோதமான சாஸ்திரங்கள் சின்னாளுள் அழியத்தக்க புரட்டு நூல்களே யெனவும், அகம்பிரமமார்க்கத்தையே புகழ்ந்து கூறப்பட்டிருக்கின்றனவேயன்றி, நமது செட்டியார் மதத்திற் காதாரமாய் ஆகமங்களின் உயர்வு இத்துணைத்தெனவும், சுத்தாத்துவித சைவ சித்தாந்தம் என ஒரு மதம் உண்டு எனவும், பிரபஞ்சம் முக்காலத்தினும் அழியாத நித்தியப் பொருள் எனவும், ஆண்டானடிமை மார்க்கமே யுயர்வான தெனவும், அகம்பிரம மார்க்கம் ஆபாச மார்க்க மெனவும் எங்கேனும் அம்மநு ஸ்மிருதியில் கூறப்பட்டிருக்கின்றனவா? அணுவேனு மின்றென்பது இவரும் ஒப்பத்தக்கதேயாம்.

இன்னும், தைத்திரிய உபநிடதத்திலே இப்பிருகுமுனிவர் தன்பிதாவாகிய வருண பகவானை யடைந்து, பிரமஞானோபதேசம் பெற்றுத், தேகாதிப் பிரபஞ்ச மெல்லாம் மித்தையே யெனத் தெளிந்து, பஞ்சகோச விசாரஞ்செய்து, அநாத்ம புத்தியற்று ஆத்மஞானமுற்று, ஜீவன் முத்தராய் வாழ்ந்தாரென்று கூறப்பட்டுள்ளது.

இன்னும், இம் முனிவர்பிரான் இவ்விநாயக புராணத்திலேயே, எவ்வளவோ பக்தர்களுக்குக் கணேசர் அநுக்கிரகித்த முறை கூறியிருக்கிறாரே. எங்கேனும் இவரது பண்டாரசாஸ்திரப் பரிபாஷைகள் காணப் படுகின்றனவா? இருப்பின், அவரது வாக்கிய சுலோகங்களை நமது நண்பர் எடுத்துக்காட்டலாமே?

இதுகாறுங் கூறிப்போந்த பற்பல பிரபல பிரமாணங்களால், பிருகு முனிவர் வேத முதலிய வித்தைகளைச் சிரமேற் கொண்டொழுகிய உத்தமமுனி சிரேஷ்டர் எனவும், அம்முனிபுங்கவர், வேதபாஹ்ய பாசுபததந்திர வழியொழுகும் நமது செட்டியாரது துவித சைவ பாஷண்ட மதக்கோட்பாட்டுக்கு எள்ளளவும் இணங்காரெனவும் பசுமரத்தாணியென அறைந்தவாறு காண்க

ஆகையால், அம்முனிவர்பிரான் இப் படலத்தில், பக்தி விசேடத்தை விளக்க வந்தாரே யொழிய, நமது செட்டியாரும் அவரது பண்டாரத்தாரும் புனைந்துகூறியவாறு, பதிபசு பாச நிர்ணயஞ் சொல்லவந்தவர் அல்லர் என்பது விகஸிதமாம், ஏனெனில், பதி பசு பாசம் என்ற பரிபாஷையே அவர்






கனவினும் கேட்டிரார் என்பதற்கு மேற்காட்டிய அவரது நூற்பிரமாணங்களே தக்க சான்றாம்.

இனி, நாரத பகவானுடைய வாக்கியத்தைப் பிரமாணமாகக் கொள்ள நேரின், அவர் அறுபத்து நான்கு கலைகளையும் ஐயந்திரிபறக் கற்றுணர்ந்தும், துக்கம் நீங்கப் பெறுதவராய் சனற்குமார முனிவரை யடைந்து, பிரம வித்தையைச் சிரவணித்துத் துக்கம் நீங்கப்பெற்றாரெனப் பற்பல பிரபல சுருதிகள் கோஷிக்கின்றன வாகலின், இவரது துவித பாஷண்ட மதத்திற்கு அவர் கருத்துத்தான் எவ்வாறு இணங்கும்.

இனி, ஆரணம் பல புகழ் வாரணமுகமுறும் ஐங்கரக்கடவுளாகிய கணேசப் பெருமான் திருவாக்கைப் பிரமாணமாகக் கொள்வாமெனின், இப்புராணத்துள் 140வது அத்தியாயத்தில், அப்பெருமான் வரேண்யன் என்னும் அரசனுக்கு உபதேசித்தருளிய (கணேச) கீதையின் அபிப்பிராயத்தையும் ஒப்புக்கொள்ள வேண்டுமன்றோ? அக்கீதையின் தாற்பரியமோ,

நானே உயர்வான பிரம தேவன், மாட்சிபொருந்திய ருத்திரனும் நானே. தாவரசங்கம ரூபமான சகத்து முழுதும் நானே."

"உற்பத்தி நாசமற்றவனும், சர்வபூத சொருபனும் விளங்குபவன் யானே." "பிரமத் தியானமுள்ளவன் பிரமமே யாவன்."

"ஆத்மத்தியானத்தில் அதிப்பிரியனும் ஞானத்தினால் நசிக்கப்பட்ட சகலசமுசயத்தையுடையவனும், இருப்பவனைக் கர்மங்கள் அணுகா."

"அறிய வேண்டிய பொருளை யறிந்தபின், மறுபடியும் பந்தத்தை யடையான், அவ்விதம் அறிந்தவன் சகலபூதங்களுந்தன்னிடத்திற் றோன்றக் காண்கிறான்."

"காணப்படு பொருளையும், காணப்படாப் பொருளையும், பிரமசொரூபமே யென்று கடைப்பிடித் தொழுகு."

"உலகத்தில் தன்னையும், தன்னிடம் உலகத்தையும் எவன் பார்க்கிறானோ, அவனை நான் ஆதரிக்கின்றேன், என்னெனில், என்னைத்தவிர அவனில்லை. அவனைத்தவிர யானில்லை."

என இவ்வாறு பிரமஞானத்தையே பெரிதும் புகழ்ந்து பாராட்டத்தகதாய், பகவற்கீதையின் பொருட்போக்கையே, முழுதும் ஒத்த நடையுடையதாய்க் காணப்படுகிறதே யொழிய நமது நண்பர்புனைந்து கூறும் சைவசித்தாந்தத்தையும், ஆண்டானடிமைத் திறத்தையும் அணுவேனுங் கூறுவதாய்ப் புலப்படவில்லையென்பது அக்கீதையை யொருமுறை யாராய உள்ளங்கை நெல்லியென நன்கு விளங்கும். ஆகையால் கணேசப் பெருமான் வாக்கியத்தினாலும், நமது செட்டியாரது துவித மதத்திற்குத் தினைத்துணையுஞ் சாதகந்தோன்றுவதாகப் புலப்படவில்லை.

இவ்வாற்றால், இச்சரித்திரத்திற் காதாரமாக விளங்குகின்ற, பிருகு முனிவர், நாரதபகவான், கணேசப்பெருமான், ஆகிய மூவர்களும் பரமாத்

வைத சித்தாந்த மாகிய பிரமஞான வொழுக்கத்தையே பெரிதும் புகழ்ந்து பாராட்டி யுலகத்திற் பரவச் செய்தவர்களாகக் காணப்படுகிறார்களே யொழிய, நமது செட்டியாரது துவிதமதத்திற்கு அநுகூலசித்தர்களாய் விளங்கவில்லை யென்பது 'வச்சிர தம்பம்போல்' நிலை நிறுத்தப்பட்டவாறுணர்க!

சனகமகாராஜனையோ, சாதனசதுட்டயங் கொண்டொழுகிய பரமாத்வைத பிரமஞானியெனப் பற்பல ப்ரபல சுருதிகள் முறை யிடுகின்றன. ஆதலால், நமது செட்டியார் அம் மகாராஜனைத் துவித மதங்கொண்டொழுகிய சைவசித்தாந்தியென்பதற்கு பிரமாணந்தான் யாதோ எனின், மேற்காட்டிய புரட்டுப் பண்டாரப் பாட்டொன்றே யாம்,

இவர், இந்தப் பண்டாரப் பாட்டைப் பல்லவியாகக் கொண்டு, புவிராஜரும் தவராஜரும் புகழ்ந்து கூறும், தத்துவஞானியாகிய சனகமகாராஜனை "அகந்தை யுடையவனென்றும், மயக்கமுடையவனென்றும், மாயாவாதியென்றும், மெய்ந்நெறி யறியாப் பொய்ந்நெறி யாளனென்றும், நன்மொழிகள் தங்கா ஓட்டைமன முள்ளாவனென்றும், அறிவில்லாதவனென்றும், வாய்க்கொழுப்புடையவனென்றும், கபடமுடையவனென்றும், மூடபுத்தியுடையவனென்றும், ஊத்தை வாயனென்றும், துக்கமுடையவனென்றும், அகம் பிரமப் படுகுழியில் வீழ்ந்தவனென்றும், கணேசமூர்த்தியால் "மூடனே! உன்பிரமத்தை நெறிப்பிலிட்டுப் பொசுக்கிவிடு" என்றுரைக்கப் பட்டானென்றும், சிவத்துரோகமுடையவனென்றும், திருட்டுப் புத்தியுடையவனென்றும், அகம் பிரம மார்க்கத்தை வாங்கித்துத் தள்ளியவனென்றும்..........."தமது போகூழ் வலியின் புணர்ப்பினாலே பற்பலவாறு புலம்பிக் கண்மூடித்தனமாய் இகழ்ந்து கூறத் தலைப்பட்டார். நேயர்காள்! இவர் புனைந்து கூறும் இவ்வளவு வசைமொழிப் பல்லவிகளுள் எதேனும் ஒன்று மேற்காட்டிய மூலகிரந்த சுலோகார்த்தத்துள் கடுகளவேனுங் காணப்படுகின்றதா? இன்றே! இன்றே!! இன்றே!!!

இன்னும், இவர் அடுக்கியடுக்கி எவ்வளவு வசை மொழிகளை வாய் கூசாது எடுத்துக்கூறினும், அப்புன்மொழிகள் அம்மகாராஜனையடையுமா? அடையா! அடையா! முக்காலு மடையா!

புரட்டுப் பண்டார மொழிபெயர்ப்பையே தனக்குப் பற்றுக் கோடாகப் பிடித்து அகந்தையும், மயக்கமும், அறிவின்மையும் வாய்க்கொழுப்பும், கபடமும், துக்கமும், பொய்யும், புனைசுருட்டும், திருட்டும், புரட்டும், பொருந்தியவதற்குறையுளாய் விளங்கும் இவர், உதாசீன ஊத்தை நாறும் தனது பேழ்த்த வாயைத்திறந்து; பிரமஞானப் பெருஞ் செல்வரும், சத்துவகுண சம்பன்னரும் ஆகிய சனகரைத் தூஷிக்கக்கிளம்பித் தன்புற்றுக் கழிவாராயினார்! அந்தோ! பாவம்! பெரியாரைப் பேணுதொழுகில், எரிவாய் நரகிற் கிடாக வேண்டுமென்பது சுருதி சம்மதம்!

"பெரியாரைப் பேணா தொழுகிற் பெரியாரால், பேரா விடும்பை தரும்.

கூற்றத்தைக் கையால் விளித்தற்று லாற்றுவார்க், காற்று தா ரின்னு செயல்" என்பன பொய்யாமொழி யன்றோ?

இனி இப்புரட்டு மொழிபெயர்ப்பைத் திரட்டி இவர் அவலமதி கொண்டு எழுதிய சரித்திரத்தைக்கொண்டே, "சனகமகாராஜா துவிதமதங் கொண்டொழுகிய சைவசித்தாந்தியல்லர்" என நன்கு நிரூபித்து இவரது பேழ்த்த வாயை யடக்கி அறிவுறுத்தி நிறுத்துவாம்.

மேற்காட்டிய மூலகிரந்த சுலோகார்த்தத்தில் ராஜசிரேஷ்டனும், அபிமானியும், தியாகியும், வேத வேதாந்தங்களின் கரைகண்டுணர்ந்தவனும், அன்னதானத்தில் விருப்பமுடையவனும், பிராமண பூஜை நாடோறும் புரிபவனும், ஆகிய சனக மகாராஜன் மிதுலாபுரியை அரசுபுரியுங்காலையில்—" என்று காணப்படுகிறது.

நமது செட்டியாரோ "நானே பிரமம் என்கின்ற ஏகாத்மவாதிகளால் ஞானசனகர் என்று துதிக்கப்பட்ட மிதுலாபுரியரசரானவர்." என்று கூறத் தலையிட்டார். இந்தவாக்கியத்திற்காதாரம் பிருகு முனிவர் வாக்கியத்திலேனும் அதனை மொழிபெயர்த்த பண்டாரப்பாட்டிலேனும், ஏதுமின்று. இது நமது செட்டியார் புனைந்துகூறிய புரட்டேயாம் புரட்டுத் தொழில்தான் இவருக்குத் திரட்டுப்பால் போலும் என்று நேயர்களறிந்த விஷயமேயாம்.

இவர், "நானே பிரமம் என்கின்ற ஏகாத்ம வாதிகளால் ஞான சனகரென்று துதிக்கப்பட்ட மிதுலாபுரி யரசர் என்றதனாலே, நானே சிவன் என்கின்ற அநேகாத்ம வாதிகளாகிய துவிதசைவ பாஷண்டிகளால் துதிக்கப்படாதவர் சனகர் என்பது தானே போதருமன்றோ?

எவ்வாறெனில்:—கிருத்துவர் மகமதியர்களால் துதிக்கப்படாத நமது செட்டியாரைக் கிருத்துவரென்றும் மகமதியரென்றும் நாம் கூறத்தகுமா? தகாதே!

சனகமகாராஜா பிரமஞானியாக விளங்கியிருந்தவராதலாலே, இற்றை நாள் வரையில் பிரமஞானப் பெருஞ்செல்வராய பெரியோர்களாற் பெரிதும் புகழ்ந்துரைக்கப்பட்டு வருகிறார். அவர் துவித சைவ சித்தாந்தியாய் விளங்கியிருப்பின், சைவசித்தாந்த நூற்களாலும் சைவசித்தாந்திகளாலும் புகழ்ந்து கொண்டாடப்படுவாரன்றோ? என்னெனில், பிறமதத்திலிருந்து வந்தணைந்த திருநாவுக்கரசு சுவாமிகளை. எவ்வாறு இவர்கள் மிகுவாய்ப் புகழ்ந்து கொண்டாடுகிறார்களோ, அவ்வாறே அத்துவிதத்திலிருந்து துவிதத்தையடைந்தவராயிருப்பின், துவித சைவர்களாற் சனக மகாராஜா மிகவும் கொண்டாடப்பெறுவாரே. இவ்வாற்றால், நமது செட்டியார் சனகரைத் துவித மதங்கொண்டொழுகிய சைவசித்தாந்தியெனக்கூற முன் வந்தாரேனும், அவரது முதல் வாக்கியமே யவருக்கு அநுகூலமின்றிப் பிரதிகூலமாய் முடிந்ததை விளக்கியவாறு காண்க!

இன்னும் இவர் "நானே பிரமம்" என்னும் மார்க்கம் அகந்தை மார்க்கம் என்றும், ஆபாச மார்க்கம் என்றும், ஆண்டானடிமை மார்க்கமொன்றே பாசமார்க்கமென்றும், வேத சிவாகமாதி சகல சாஸ்திரங்களுங் கூறுகின்றன என்று, வேதசிவாகம புராணேதிகாசாதி சகல சாஸ்திரங்களின் கரைகண்டுணர்ந்தவர்போல் பகட்டுகிறார்.

"கற்றதுகை மண்ணளவு கல்லா துலகளவு
உற்ற கலைமடந்தை யோதுகிறாள்—நித்தம்
வெறும்பந் தயங்கூற வேண்டாம் புலவீர்!"

என்ற நமது ஔவைப்பிராட்டியின் அருள்வாக்கு இவரகத்திற் புகுதவில்லை போலும்.

வேதங்கள் மலைமலையாக வளர்ந்து கிடக்கின்றன என்றும், அவற்றுள் ஒரு சிறிதை வியாசபகவான் நான்கு கூறாய் வகுத்து வைத்தார் என்றும் பெரியோர் கூறுவர். இவரே தமிழிலுள்ள சில இலக்கணஇலக்கியத்தைக் கற்றமாத்திரத்தில், சகல சாஸ்திரப் பண்டிதரெனத் தன்னைப் பாவித்து, அகந்தை மேற்கொண்டொழுகுவதோடமையாது, தம்மையடுத்தவருக்கும் அவ்வகந்தை வழியையே கற்பித்து வளர்த்து, அவமே காலங்கழிக்கிறவராய் விளங்குகிறாரேயொழிய, "அகம்பிரமாஸ்மி" என்னும் சிந்தனையுடையாராய் சத்துவகுண நிஷ்டாநு சந்தானமுள்ளவராய் விளங்கிய தத்துவஞான உத்தம சீலராகிய சனகமகாராஜா, அகந்தையுற்றவராய் விளங்கியவரல்லர் என்பது சுருதியுக்தியநுபவ சம்மதமேயாம். ஜீவகாருணியம், ஈசுர பக்தி பாச வயிராக்கியம் பிரம ஞானமாகிய நான்கையுங் கடைப்பிடித்தொழுகிய புண்ணிய சீலராகிய சனகரிடத்து இவர் கூறிய அகந்தையாதி தீய குணங்கள் அணுவேனுமடுக்குமா? அடா! அடா! முக்காலுமடா!

சகல வேதாகமாதிகளும் முத்தியையடையும் மார்க்கம், "ஆண்டானடிமை மார்க்கம்" ஒன்றே யென்று முறையிடுகின்றன.

முத்தியையடைவிக்கும், சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு பாதத்திற்கும் உரியவாகிய மார்க்கம் முறையே 'தாத மார்க்கம், சற்புத்திர மார்க்கம், சகமார்க்கம்' சன்மார்க்கம்,' என நான்கு வகைப்படும் என்றும், இவற்றுள் சன்மார்க்கமாவது 'நீயே நான் நானே நீ' எனவும் சகமார்க்கமாவது தோழனும் தோழனும்' எனவும், சற்புத்திரமார்க்கமாவது 'பிதாவும்புத்திரனும்' எனவும் தாத மார்க்கமாவது 'ஆண்டானும் அடிமையும்' எனவுங்கொண்டொழுகும் இயல்புடையன என்றும், சகல சாத்திரங்களும் சாற்றுகின்றன. இவற்றுள், ஆண்டானடிமை மார்க்கம் அதமாதிகாரிகளுக்கே சாதனமாகும் எனவே காணப்படுகின்றது. இவர் பேராதாரமாக எடுத்துக் காட்டும் இக்கணேச புராணத்திலேயே வியாசர் உபதேசம்பெறும் பாகத்தில்

"சகலமுஞ் சொரூப மாகையாற் சகல பூதமுஞ்சொரூப மேயாக
இகலறக் காண்பார் சீவன்முத்தர்களாயிருப்பர்கள் உலகிலுள்ளவர்க்குப்

புகலனுக் கிரகப் பொருட்டுலக கத்திற் புரையறச் சரிப்பர்கா மாதி
திகழுமிந்திரியம் வென்றவர் ஓடுஞ் செம்பொனு மொப்பவே காண்பர்."

"அனைய தாகலின் வீட்டினை யாதரித் தவர்கள்
வினையெ லாந்தரும் விடயத்தின் மேவிய பொறியை
யெனவுரு வகை மீட்டிரும் பிரமமேஞ் ஞான்று
நினைதல் வேண்டுமெய்த் தவத்திடை நின்ற மாமுனியே."

"பொருவின் மாதவ னேயிது வேபுணர் பிரம
சொருப மாகிய புத்தியச் சொரூபமாய் நின்றோன்
கருமம் யாது மில்லாமலே யிருப்பன் மன்கரும
மருவி நின்றிடுஞ் சுதந்தரன் பிரமத்தை மருவான்."

"ஞான நிட்டையையுடையவர் ஞானமே வடிவ
மான மெய்ப்பெரும் பிரமமே யாவர்பின் பிறவார்
வானமுட்டிய தவத்தினேய் வழங்கும்யோகத்தை
யினம்விட்டுயர் பிரமமா யிருந்தனை கேண்மோ."

"அறியு நீரதொன்றேயது பிரமமே அதனை
அறியு ஞானமே ஞானமாம் அருந்தவ முனியே
செறிசாரசர மாகிய திரளெலாமதுவே
பிறிதராவுயிர்ப் பேதமும் பேசிய வதுவே."

"மண்ணிற் கந்தமும் நீரினிற் சுவையும்வைதழலில்
நண்ணு ரூபமும் வளியினிற் பரிசமும் சுவைதீர்
விண்ணிற் சத்தமும் வேறுமவ் வவற்றினீங்காத
உண்மை யாங்குணம் அனைத்துமப் பிரமமே யுரவோய்."

"இனைய தாகிய பிரமத்தை யிறந்துயிர் போங்கால்
நினையின் வேறுறா நிலையது வாகவே நிற்பர்
வினையின் மீட்டோர் விண்டுவை வேதனை யாதி
தனைவிராவினோர் தாங்களு மீள்குவர் சாதம்."

என்று இவ்வாறு, அத்துவிதபரமாகவே சகலபூதங்களும், அவற்றின் குணங்களும், சராசர வுயிர்ப் பேதங்கள் முதலிய யாவும் பிரம சொரூபமே யென்றும், பிரமமே தானுக வுறைத்துநிற்கும் புத்தியே திரபுத்தியென்றும், யாவற்றையும் பிரம சொரூபமாய்ப் பார்த்தலே குற்றமற்ற சத்துவ ஞான மென்றும், பேதமாகப்பார்த்தல் அஞ்ஞானமாகிய தாமதஞான மென்றும், உயிர் நீங்குங் காலேனும் பிரமத் தியானம் செய்பவர் பிரம சொரூபமே யாவாரென்றும், ஞானநிஷ்டையை யுடையவர் ஞானவடிவாகிய பிரம சொரூபமே யாவாரே யொழிய, மீண்டும் பிறவியை யடையாரென்றும், கன்மத்தை யவலம்பித்தொழுகியவர் பிரம சாக்ஷாத்காரம் பெறுது, பிறவியிற் சுழல்

வர்என்றும், பிரமஞானமே ஞானமென்று மீக்கூறப்படும், மற்றவை அஞ்ஞானமே யாகுமென்றும், மோக்ஷத்தை யடைய விரும்புகிறவர்கள் பிரமத்தியான வழியையே கடைப்பிடித் தொழுகவேண்டுமென்றும், அவ்வழி யொழுகிய பெரியோரே ஜீவன்முத்தர்க ளாவார்க ளென்றும், இவர் பற்றுக் கோடாக் கொண்ட பண்டாரப் பாட்டேபலவாறு புகழ்ந்து கூறி யிருத்தலை யிவர் படிக்கவில்லை போலும். ஒருநூலில் தாம் மேற்கொண்ட படலத்திற்கு அடுத்த படலம் எவ்வாறு கூறுகிறது என்று ஆராய்ந்தறியாத இவரன்றோ வேதாகம புராணேதிகாசாதி சகல சாஸ்திரங்களின் உண்மையை யுணர்ந்த பண்டித சிகாமணி! பாரக்கவமுனிவர் சுத்தப் பிரம ஞானத்தைக்கூறிய §இப்படலத்தில் இவரது பண்டாரத்தார் தமது துவித ஆபாசக் கொள்கையைப் புணைக்கப் பலவாறு முயன்று முரண்பட்டு, இடை யிடையே தமது துவித சைவபரிபாஷையை நுழைத்து, அரிய பெரிய விஷயங்கள் செறிந்த இப்படலத்தின் உண்மையையும் உருவத்தையுங் குலைக்கலானார், அந்தோ! இஃதெவ்வளவு மகாபாதகச் செய்கை பாருங்கள். இவ்வாறே இவரது மொழி பெயர்ப்பிலுள்ள ஆபாசம் அளப்பில.

நண்பர்காள்! இவர் சிரமேற்கொண்ட, 'இப்புராணமே யிவ்வாறு "நான் பிரமம்" என்னும் மார்க்கத்தின் மகத்துவத்தையும், இவர் கொண்ட ஆண்டானடிமை மார்க்கத்தின் அவலத்தையும் நன்கு விளக்கிற்றன்றோ? இனி வேறு பிரமாணமும் வேண்டுமோ?

இவர்மனம் ஆண்டானடிமைத்திறங் கொண்டொழுகுவதி லீடுபட்டால், எல்லோரும் இவர்வழியே செல்லவேண்டுமென்று எந்தசாஸ்திரங் கூறுகின்றது, "பக்குவத்திற் கீடாகப் பன்னெறிகளும் கூறும்" என்று பெரியார் கூறுதலை யிவர் கேட்டுமறியார் போலும். சிலர் சரியை வழியொழுகுவர். சிலர் கிரியைநெறி நிற்பர். சிலர் யோகசாதனை புரிவர். சிலர் தத்துவ விசாரணை செய்து சமாதிநிலை கூடிவாழ்வர். ஞானத்தை யடைதற்கு மற்றைய மூன்றும் சாதனங்களென்றும், ஞானத்தாலன்றி முத்தி சித்தியா தென்றும், முன்னரே கூறினும். இன்னும் இதனை,—

"பத்திநெறி நிலைநின்று நவகண்ட பூமிப்
 பரப்பைவல மாகவந் தும்
பரவையிடை மூழ்கியும் நதிகளிடைமூழ்கியும்
 பசிதாக மின்றி யெழு நா
மத்தியிடை நின்றுமுதிர் சருகுபுனல் வாயுவினை
 வன்பசி தனக்கடைத்தும்
மௌனத்திருந் துமுயர் மலைநுழைவு புக்கியும்
 மன்னுதச நாடி முற்றும்

§ இப்படலத்தின் மொழிபெயர்ப்புப் பலவாறு புரட்டப்பட்டிருத்தலை ஈண்டு விரிக்கின் நூல்விரியுமென விடுத்தாம்.

சுத்திசெய் தும்மூல பிராணனேடங்கியைச்
சோமவட் டத்தடைத்தும்
சொல்லரிய அமுதுண்டு மற்பவுடல் கற்பங்க
போறுகிலை நிற்க வீறு
சித்திசெய்தும் ஞானமலதுகதி கூடுமோ?"

என்ற தாயுமானவர் திருவாக்கைத்தமது, கல்விச்செருக்குற்றுப் பரதூடணத்தடிப்பேறி யிருக்கும், படிற்று மனத்திற்கு அடிக்கடிபோதித்து இனியேனும் முத்தியடைவிக்கும் மார்க்கம் ஆண்டா னடிமை மார்க்க மொன்றே என்று தேற்றேகாரம் கொடுத்துக் கூறவும் எழுதவும் நாவையுங் கரத்தையும் நீட்டாமல் பேழைப்பாம்பென அடங்கி யொழுகுவாராக!

"சகல வளங்களும் நிறைந்த மிதுலா புரியின்கண்ணே, அன்பு நூலாராய்ச்சி, கொடை, மிக்க போர்வல்லபம், ஒழுக்கம், இல்லறஇன்பம் முதலிய பலவற்றாலும் மேம்பாடுடைய சனகராசா அரசாட்சி செய்துவருங்கால் ஒருநாள் நாரதமுனிவர் அவரெதிரே சமீபத்தில் வந்தருளினர்: அவரது நல்வரவு தூரத்தே தெரிந்து எழுந்து சென்று வணங்கவேண்டிய சனகர், சமீபித்த பின்னும் வணங்காமலும், இருக்கைவிட்டெழாமலும் இறுமாந்திருந்தார்" என்று வரைந்தார்.

நேயர்காள்! கவனியுங்கள். மேற்காட்டிய மூலகிரந்த சுலோகார்த்தத்துள், 'நாரதரைக் கண்டவுடன் சனக மகாராஜா பிரமஞானபிமானத்தால் சிரித்தார்.' என்று காணப்படுகிறது. அப்படிச் சிரித்ததற்குஞ் சிறந்த காரணமுங் காட்டப்படவில்லை.

நமது செட்டியாரோ, "நாரதரைக் கண்டவுடன் சனகர் வணங்காமலும், இருக்கைவிட்டெழாமலும் இறுமாந்திருந்தார்." என்று படுபொய்யைப் புனைந்து சாதிக்கிறார். இவர் செய்த புரட்டுக்குத்தக்கவாறு,

"மனமாதி கரணங்களுடன் இந்திரியவிஷயாதி போகங்களை அநுபவித்துக் கொண்டேயிருந்தும், அச்சனகர் நாமே நிகரில்லாத பிரமமென்று மதித்திறுமாந் திருக்கின்ற செருக்கினால, நிர்மல சிவவாக்காகிய வேதசிவாகமாதி சிவ சாஸ்திரங்களில் ஆண்டா னடிமைத் திறமே கூறுகின்ற உண்மையைச் சிறிது முணராது, அகம் பிரமக்கோளில் உறைந்து நிற்கின்ற மயக்கமே, மகரிஷியை வழிபாடு செய்ய வொட்டாமற் றடுத்தது" என்று தமது துவிதமதத்திற் காதரவாய சில ஆபாசவுரைகளைப் புனைத்துப் பொய்க்காரணம் கற்பிக்கிறார். இந்தக்கற்பனையா பொருந்தும்? ஆனல், நூலாசிரியர் கூறியவாறு, சிரித்ததற்குக் காரணந்தான் யாதோவெனின்,— நன்கு கூறுதும்.

நாரத முனிவர் சனகமகாராஜனைச் சந்தித்த அக்காலம், சனற்குமார முனிவரிடம் பிரம ஞானேபதேசம் பெறாதகாலமா யிருக்கலாம். அதனால்

ஞானமின்மையைக் காட்டக் கூடிய புன்மொழிகளை ஏதேனும் புகன்றிருப்பார். அதைக் கேட்ட சனகர், தவசிரேஷ்டராயும், திரிலோக சஞ்சாரியாயும், கலகப்பிரியாராயும் விளங்கும் இவர், இன்னுந் தத்துவ ஞானோபதேசம் பெறாத குறையாலன்றோ, இவ்வாறு சம்பாஷிக்கலானு ரென்று, இரக்கமுற்று, ஊமையாடி யிருக்கலாமென்று கொள்ளற் கிடமுண்டென்க!

இனி, மேலே அம்மன்னர் மன்னனாகிய சனகமகாராஜா விடத்தில் நமது நண்பர் கற்பித்த குணங்களில்' முதன்மையுற்றதாய் விளங்கும் 'அன்பு' என்னும் ஒரு குணம் இருந்ததா? இல்லையா? என்பதைக்குறித்து ஆராய்வாம். அன்பாவது, தொடர்புடையோரிடத்துச் செல்லும் மனக்கசிவு. கண்டோர் அருவருக்கத் தக்க தேகமுடையவரும், துர்நாற்ற முடையவரும், வறுமையுடையவரும், தொழுநோயுடையவரும், பெரும்பசியுடையவரும், ஆகக் காணும்படி யெழுந்தருளிவந்த (விநாயகக்கடவுளாகிய) ஒரு புதிய பிராமணரைக் கண்ட மாத்திரத்தில் இருக்கை யெழுந்து, அவரையாசனத்திருத்தி, விதிப்படி பூஜித்துச் சோடசவுபசாரத்துடன் போஜனஞ் செய்வித்த அச்சனக மகாராஜனுடைய மனம், சடைமுடி தரித்து, விபூதி உருத்திராக்க மணிந்து, மகதியாழ் கையிலேந்திவந்த, பலவித மகத்துவங்களும் நிறைந்த, திரிலோகசஞ்சாரியென உலகெலாம்புகழும், ஸ்ரீநாரதபகவானைக் கண்டமாத்திரத்தில், எவ்வளவு அன்புகொள்ளவேண்டும். அவ்வாறின்றி இறுமாப்புற்றிருந்ததென்றால், இறுமாப்புடையமனத்தோர் அன்புடையராவரோ தந்தை தாய் குரு தவசீலர் முதலிய பெரியோர்களைக் கண்டமாத்திரத்தில், இருக்கை யெழுந்து, மிக்க முகமலர்ச்சியோடும், அகமகிழ்ச்சியோடும் எதிர்கொண்டழைத்து, அவர்களுக்குற்ற குற்றேவல் புரியக் கடமைப் பட்டுள்ள மனமே, அன்புடையமனம் என்பர் ஆன்றோர். சாதாரணமாக, நமக்குக் கல்விகற்பித்த ஓர் ஆசிரியர் நம்வீட்டுக்குவந்தால், நாம்எவ்வளவு மரியாதை அவருக்குச் செய்கிறோம். அங்ஙனமாக, உலகை யொருகுடை நீழலிற் செங்கோல் செலுத்திய, பற் பல சற்குணங்கள் நிரம்பிய ஓர் உத்தம மகாராஜன் அரண்மனைக்கு, உலகப்பிரசித்தியுற்ற ஓர் மகரிஷிவந்திருந்தால், ஆங்கு எவ்வளவு மரியாதைகள் நடைபெற்றிருக்குமென்பது சொல்லாமலே விளங்கும். அவ்வாறின்றி, அம்முனி புங்கவரைக் கண்டு, இருக்கை யெழாதிறுமாந்திருந்த அம்மன்னன், அன்புடையவனாவனா? நூலாராய்ச்சி யுடையவனாவனா? கொடை யுடையவனாவனா? ஒழுக்கமுடையவனாவனா? இல்லற இன்பமுதலிய பலவித மேம்பா டுடையவனாவனா? ஆகான்! ஆகான்! ஆதலால், நமது செட்டியார் புனைந்து கூறியபடி, இச் சரித்திர ஆரம்பம் "நாரதரைக் கண்டு இருக்கையெழாது இறுமாப்புற்றிருந்தார் சனகர் "என்ற தொடக்கத்தை யுடையதாகா தென நன்கு தெளியப்படும். ஏனெனில் மல்லிகை மலரிடத்து ஓர் சுகந்த மணத்தைக் கற்பித்து, அக்குணம் வேண்டும்

போது, அதனிடத்து இல்லையெனச் சொல்லுவதோ டொப்பாகலின். அத்தகைய ஒரு குணமும்,ஒழுக்கத்தின் ஒருபகுதியும், அடையப் பெருத அச்சனகரை, சகலசற்குண சம்பன்னரென்றும், ஒழுக்கத்தி லுயர்ந்தஉத்தமரென்றும் கூறுதல் பொருத்தமாகுமா? ஆகாது. ஆகாது.

ஆயின், பேருக்கன்புடையவனும்,நமது செட்டியாரைப்போல் பெருமதவாதங் கொண்டவனும், தவசீலரைக் கண்டால் இருக்கை யெழாத புல்லொழுக்க முடையவனும், ஆகிய ஓர் சனகன் இவர் கற்பனைக்கொத்தவாறு, அக்காலை ஆங்கு இருந்திருப்பானென யூகிக்கவேண்டியிருக்கிறது. என்னெனில்,— மிதிலாபுரிக்கு அரசாயமர்ந்தவரெல்லாம், சனகரெனப் பெயர் பூண்டவரே. எந்த சனகரோ இச் சரித்திரத்திற் கூறப்பட்டுள்ளவர். வேதாந்திகளாற் புகழப்பட்டுள்ள ஞானசனகரே யிவர் என்று எவ்வாறு கொள்ளக் கூடும்?

என்னே? வேதாந்திகளான் மீக்கூறப்பட்டுள்ள ஞான சனகரோ, வேத முதலிய பதினான்கு வித்தைகளுக்குட் கட்டுப்பட்டு ஆஸ்திக புத்திகொண்டொழுகல், அவைகூறும், நித்தியநைமித்திய கருமங்களைப் புரிதல், யக்கிய யாகங்கள் செய்தல், விபூதி உருத்திராக்கம் தரித்தல், சிவபணியியற்றல், சிவனடியாரைச் சிவனெனப் பேணல், காயத்திரி பிரணவம் பஞ்சாக்ஷரம் முதலிய செபஞ்செய்தல், வைராக்கிய உபாதிகளை அநுசரித்தல், அன்பு, அருள்,கொல்லாமை, வாய்மை, இனியவை கூறல், ஈகை, பொறுமை, அடக்கம், புறங்கூறாமை, முதலிய சற்குணங்களை மேற்கொண் டொழுகுதல், ஆகிய உயர்நலங்களை யுடையராய், சாதன சதுட்டய சம்பத்துற்றவராய், சிரவண மனன நிதித்தியாசன சித்தராய், சமாதி சாக்ஷாத்கார சத்திய நிலைமையை யடைந்தவராய், விளங்கிய தத்துவஞான உத்தமரெனப் பற்பல பிரபல சுருதிகள் முரசறைகின்றன வாதலின், நமது செட்டியாரது புனைசுருட்டுக்கு அவர் எவ்வாறு பொருந்துவர்? அறிவிற் சிறந்த அன்பர்களே!

"காய்த லுவத்த லகற்றி யொருபொருட்கண்
ஆய்த லறிவுடையார் கண்ணதே—காய்வதன்கண்
உற்றகுணந் தோன்றா தாகு முவப்பதன்கண்
குற்றமுந் தோன்றாக் கெடும்" என்ற பெரியார் வாக்கைச் சிந்தையிற் கொண்டு இதனை நீங்களே யூகித்துப் பாருங்கள்.

"நாம் பிரமம் என்று எழும்பும் மாயாவாத நெறி" யென்று பலவிடத்தும் நமது செட்டியார் விரித்திகழுகிறார். இவர்க்குத் தமதுமத சாஸ்திரப் பயிற்சியே யணுவளவு மில்லை யென்று இதனால் நன்கு விளங்குகின்றது. வேதாந்தி யார்? சைவர் யார்? மாயாவாதி யார்? என நான்முகமாய் ஆராய்ச்சி செய்து இவ்வாறு சொல்லுகின்றாரென்று அணுவும் புலப்படவில்லை. கண் மூடித்தனமாய்க் கண்டகண்டவாறு புலம்பிக் கழிகிறார். இவரது சி

பூஷணமாய் விளங்கும் சைவத் திருமுறைகளுள் ஒன்றாகிய திருமந்திரத் திலே,

"ஆகின்ற தொண்ணூறோ டாறும் பொதுவென்பர்
ஆகின்ற வாறா றருஞ்சைவர் தத்துவம்
ஆகின்ற நாலேழ்வே தாந்தி வைணவர்க்
காகின்ற நாலாறை யைந்துமாயா வாதிக்கே"

என்ற செய்யுளிலே, முப்பத்தாறு தத்துவ மேற்கொண் டொழுகுவோர் சைவர் எனவும், இருபத்தெட்டுத் தத்துவ மேற்கொண் டொழுகுவோர் வேதாந்தி எனவும், இருபத்தைந்து தத்துவத்தை யவலம்பித் தொழுகுவோர் மாயாவாதி எனவும், சிறுவருக்கும் விளங்கும்படி விளக்கியிருக்கிறார் திருமூல நாயனார். அந்நூலுக்குக் குறிப்புரை யெழுதி வெளியிட்டிருக்கும் யாழ்ப்பாணத்து விஸ்வநாத பிள்ளை யவர்களும் "மாயையை முதற் காரணமாய்க் கொள்ளுபவர் மாயாவாதி! அவர் சாங்கியர்" என்று வரைந்திருக்கிறார். ஆகையால், இனி வேதாந்திகளை மாயாவாதியென்றுசொல்ல நாவை நீட்டாராக! இன்னின்ன காரணத்தால், இவரே மாயாவாதியரெனவும், இன்னின்ன காரணத்தால் இவரே நாஸ்திக ரெனவும், மேற்காட்டிய துவித சைவ கண்டன நூல்கள் பல பறையறைகின்ற பேரொலியும் இவரது செவியிற் படவில்லை போலும். அமைக.

"இது மெய்ந்நெறியா? பொய்ந்நெறியா? என ஆகிக்கும் உணர்வு சனகரிடத்தில், இல்லையென இவரதறிவின்மையை அப்புண்ணியர்மேலேற்றி யிகழத்தொடங்கினார்.',இவர்தான் யாவுமெய்யென்பவர். பொய்தான் ஒன்று இவருக் கில்லையே. அப்போது இரண்டு நெறி யெங்கே யுண்டாயிற்று அம் மகாராஜன் கடவுளொருவரே மெய்யானவ ரெனவும், மற்றவை யாவும் பொய்யானவை யெனவும், கசடறக் கண்டொழுகிய தீரபுருஷனல்லவா? இவருக்குத்தான் சகம் பொய்யெனவும் சிவம் மெய்யெனவும் அறியும் அறிவு சூனியமாயிருப்பின், அப்புண்ணிய ரிடத்திலும் இவரறியாமையைக் கூட்டிப் புனைதல் எவ்வளவு பொருத்தமற்ற விஷயம்.

"தன்னை மதியாதிருக்கையெழா திருமாந்திருந்த சனகருக்கு, நாரதபகவான் "உனக்கு எல்லாநலனும் மேன்மேற்பெருகுக!" என ஆசீர்வதித்தார் என்றார். உலகத்திலே தன்னைவழிபட்டவர் யாரோ அவருக்குத்தான் வழிபாடேற்றவர் அநுக்கிரகம் புரிவது வழக்கம். வழிபடாதிருமாந்திருந்தவருக்குச் சாபமன்றோ தந்துபோவர். அங்ஙனமாக, இவர் நாரதர் அநுக்கிரகம் புரிந்தாரெனல் எவ்வாறு பொருந்தும்? பொருந்தின், நாரதரைக் கண்டவுடன் இருக்கை யெழுந்து சனகர் சோடசவுபசாரம் செய்திருப்பாரெனல் தானே வந்து பொருந்து மென்பதில் ஐயமின்றென்க.

"நன்மொழிகள் தங்காத ஒட்டைமன முடையவர் சனகர் என்றார். நூலாராய்ச்சியுடைய மனம் ஒட்டை மனமாமா? இதனால் சகல வேதாகம

பண்டிதரெனப் புகழ்ந்துகொள்ளும் நமது செட்டியார் மனமும் நன்மொழிகள் தங்காத முழுவோட்டை மனமென்று ஆகுமன்றோ? இஃதெவ்வளவு பொருத்தமற்ற விஷயம் பாருங்கள்.

இவ்வாறே, இவரெழுதிய சரித்திரம் புரட்டுமொழி பெயர்ப்பைத் திரட்டி உருவகப்படுத்திய கற்பனைக் கதையன்றி அறிஞர்கள் ஆராய்ச்சிக்கு உண்மையாய்ப் புலப்படவில்லை யென்பது விகவிதமாயிற்றன்றே?

ஆனால், மேற்காட்டிய மூலகிரந்த சுலோகார்த்தத்துள், சனகரது சரித்திரங் கூறப்பட்டிருக்கிறதே யென்றால், நன்று கடாயினாய். நூலாசிரியராகிய பிருகு முனிவர் இப்படலத்தில் ஏதேனும் ஓர் அரசன் சரித்திரத்தைக் கூறியிருப்பர். அதனை மொழிபெயர்த்த இவரது பண்டாரத்தார், வடமொழிப்பயிற்சியு மிக்குடையவரும், உள்ளதை யில்லதாகவும் இல்லதை யுள்ளதாகவும் சாதிக்குமியல்புடையவருமாகிய ஆசிரியரது முதல் மாணாக்கராதலால், அம் மூலகிரந்தத்தையும், தமது துவித சைவக்கோட்பாட்டுக்காதாரவாக, அக்காலத்திலேயே திருத்திக்கொண்டிருக்கலாமென எண்ணவேண்டியிருக்கிறது. என்னெனில்,— ஒரு சிறு சரித்திரத்தை நூலாசிரியர் கருத்துக்கு மாறாகத் தமது மதக்கோட்பாடுகளை அதிவிஸ்தாரமாக இடையிற் புனைத்து மொழிபெயர்க்கத் தலைப்பட்டவர். இவ்வொரு செய்கைக்கு ஒரு சிறிது மஞ்சாரென்க. அவ்வாறு எண்ணுதல் அடாதே யென்னில், உலகப்பிரசித்தியுற்ற ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளது சரித்திரத்தை, அவரது மாணாங்கர்கள் அவரிடத்துள்ள ஆசை வயத்தராய், எப்படிப் பலவாறு கற்பித்து எழுதிவிட்டாரென்று கூற நமது நண்பருக்கு நாக்கு நீளுகின்றதோ, அப்படியே இவர்களையும் பிறர் கூறுதற்கையமின்றென்க. இவர்களது புரட்டு இவ்வாறு விளங்கிக்கொண்டிருக்கப் பிறர்மீது புரட்டுக்கூற வெளிவந்த இவரது மதி அவலமதியன்றி ஆண்மதியாமோ? ஆகாதென அறைக! மூலகிரந்தத்தைப் பிறர்தாம் மாற்றியிருக்கலாகாதோ எனின்.— நுண்ணுணர்வின்றி வினாயினாய். பிருகுமுனிவர் துவித சைவசித்தாந்தியென எண்ணற்கிடமிருந்தாலன்றோ, அவ்வாறு கொள்ளலாம். அவர் தாம் பரமாத்வைதியென அவரது வாய்மொழிகொண்டே மேலே நிலைநாட்டப்பட்டிருக்கிறதே. ஆகையால் பிறர் மாற்றற்கிடமின்றென மறுக்க.

அல்லது, இச்சரித்திரம் உண்மையாயிருப்பின், ஔவையார், கபிலர், மெய்கண்டதேவர், நாரையூர் நம்பி முதலியபக்தர்களுக்கு அருள் செய்தவர் விநாயகக்கடவுள் என்று பல நூற்களிலும் பலவாசிரியராலும் விதந்தோதப்பட்டிருப்பதுபோல, வேறு எந்நூலிலேனும், எவ்வாசிரியராலேனும் ஜனகராஜனுக்கு அருள் செய்த விநாயகக்கடவுள் என்று கூறப்பட்டிருக்கிறதா? அல்லது விநாயகக்கடவுளிடத்துப் பதிபசுபாச நிர்ணயங்கேட்ட சனகர் என்றாயினுங் கூறப்பட்டிருக்கிறதா? அவ்வாறு ஒரு நூலினுங் காணப்படவில்

லையே. ஒரு நூலிற் கூறப்பட்ட சரித்திரக் குறிப்பு, மற்றைய நூல்களினுங் கூறப்பட்டிருந்தாற்றான் உண்மையெனக்கொள்ளற்பாலதோ எனின், அறியாது வினாயினாய். சிவபூஜையாற் பயனற்று விஷ்ணுவை சரணாகதியடைந்து முத்தியுற்ற கண்டா கர்ணன் முதலியோர் சரித்திரம் எவ்வாறு வைணவர்களாலும் அவர்கள் நூற்களாலும் பலவிடத்தும் புகழ்ந்துரைக்கப்படுகின்றதோ; சமண மதத்தினும் பௌத்த மதத்தினுமிருந்து சைவமதத்தைச் சார்ந்து சிவபூஜை செய்து முத்திபெற்ற திருநாவுக்கரசு நாயனார், சாக்கிய நாயனார் முதலிய பெரியோர்களுடைய சரித்திரங்கள் எவ்வாறு சைவர்களாலும் சைவசமய நூற்களாலும் பலவிடத்தும் புகழ்ந்து கூறப்படுகின்றனவோ, அவ்வாறே உலகப்பிரசித்தியுற்ற மன்னர் மன்னனாகிய சனக மகாராஜா, விநாயகக்கடவுளிடத்துப் பதிபசுபாச உபதேசம் பெற்றவரென்றாயினும், சனகமகாராஜனுக் கருள்செய்த விநாயகக்கடவுளென்றாயினும், இவரது பண்டார சாத்திரம் பதினான்கிலேனும், மற்றைய புராணங்களிலேனும் எவ்வாசிரியரேனும் கூறியிருக்கிறாரா? ஒன்றினும் ஒருவரும் கூறவில்லையே. இனிமேல், நமது செட்டியார் "விநாயகக்கடவுள் விசித்திர மாலை" என ஓர் புரட்டு நூலைச் செய்து, அதில் இக்கற்பனைச் சரித்திரத்தை நுழைத்து, இப்புராணத்துக்கு ஆதாரமாக முட்டுக்கட்டினாலுங் கட்டுவர். இவர் அவ்வாறு புரட்டிக்கட்டும் முட்டுக்கட்டும் அறிஞர்களாராய்ச்சியாற் றட்டுக்கெட்டுக் கட்டுவிட்டுத் தவிடுபட்டொழியுமெனவறிக.

இனி மூலகிரந்த சுலோகங்களையாராயுங்கால், விநாயக பூஜையில் விசேஷ அன்புகொண்டொழுகிய, விரோசனை திரிசிரசு என்னும் பிராமண தம்பதிகளின் பக்தியை உலகத்தாருக்கு விளக்கும்பொருட்டு, அப்பெருமான் இத்திருவிளையாடல் புரிந்தாரெனப் புலப்படுகிறதேயொழிய சனகருக்குச் சைவசித்தாந்தபோதனை செய்யும்பொருட்டு அவர், எழுந்தருளினாரென்பது புலப்படற்கிடனின்று. என்னை? அக்கணேசமூர்த்தி சனகனது பக்தியைப் பரிசோதிக்க வந்திருப்பின், அவன் வேண்டிய வுணவுகளைப் படைத்தும், அப்பெருமான் திருப்தியடையாததுகண்டு நாணமுற்ற காலையில் தனது யதார்த்த சொரூபத்தை அவ்வரண்மனையிலேயே யவனுக்கு முன் விளங்கும்படி காட்டியருளி, அவன் தன்னிடம் பக்திபூண்டொழுகும்படி அறிவுறுத்திச் சென்றிருப்பார். எவ்வாறெனின்:— வல்லாளமகாராஜன் கொடையைப் பரிசோதிப்பான் திருவுளங்கொண்டு, சிவனடியார் வேடம்பூண்டு வந்த பரமேச்சுரன், அவனது வள்ளன்மையைப் பரிசோதித்துத் தனது யதார்த்த சொரூபத்தை அவனுக்கு விளங்கும்படி காட்டியருளி, வேண்டிய வரங்களைப் பாலித்துச் சென்றவாறுபோல, இந்தச் சனக மகாராஜனுக்கும் விளக்கியிருப்பார். ஆதலால் சனகர் பொருட்டும் இத்திருவிளையாடல் செய்தாரென்று கருதுவதற்குமிடமின்று. 1. இன்னும்

மூலகிரந்த சுலோகத்தில், விநாயகக்கடவுள் குட்டரோகமுடைய இழிந்த வேடத்தோடும் சனகரையடைந்தபோது, அம்மன்னர் "நம்மையாளும் பரமேச்சுரன் அடியேனைப் பரிசோதிப்பான் கருதி இப் படிவங்கொண்டு வந்தாரோ! எளியேனைப் புண்ணியத்தினின்றும் சலிக்கச்செய்ய எமதண்ணல் இப்பொன் வடிவம் பூண்டு வந்தாரோ? எனக்குப் புண்ணியமிருக்குமானால் இவரது மனதைச் சமாதானஞ்செய்ய வல்லவனாவேன்." என்று பலவாறு ஆலோசனை புரிந்து, அவரை விதிதவறாது வழிபட்டுப் பூரணவன்போடு சோடச வுபசாரம் அவருக்குச் செய்து, அறுசுவையுண்டிகளை யளித்தார் என்று காணப்படுகிறது. நமது செட்டியார் கூற்றுப்படி "ஈஸ்வரனில்லை பாவபுண்ணியமில்லை" என்ற எண்ணமுடையவராயிருப்பின் சனகர் இவ்வாறு கருதவும் செய்யவும் ஒருப்படுவரோ? 2, கணேசர் வேண்டிய வுணவுகளையுண்டு சனகரைப் பிரியுங்காலையில், மன்னனே, "நீ க்ஷேமமாயிரு." என்று விசேஷ அனுக்கிரகம் புரிந்து சென்றாரென்றுங் காணப்படுகிறது. சனகர் பக்தியின்றிய இறுமாப்புடையவராயிருப்பின், கணேசர் இவ்வாறு அனுக்கிரகம் புரிவாரா? அறிஞர்காள்! இவ்விடத்தையுற்று நோக்குங்கள். மேற்கூறிய இவ்விரு பகுதியும், மொழிபெயர்த்த பண்டாரப் பாட்டிலேனும், நமது செட்டியார் உரைநடை யேட்டிலேனும் காணப்படுகின்றதா? இவர்தாம் சற்குருவை யடைந்து, சாஸ்திரங்களினுண்மையை யுள்ளபடி கற்றுணராது, தான் தோன்றித் தம்பிரானாய் "முந்திரிமேற் காணி மிகுமாயிற் கீழ்தன்னை, இந்திரனா யெண்ணி விடும்" என்ற நீதிமொழிக்கிணங்க, சில நூற்களைக் கற்ற மாத்திரத்தில், முற்றுமுணர்ந்த மூதறிவாளர்போல் இறுமாப்புற்றுத் திரிபுணர்ச்சிகொண்டு, "வேதாந்த நூற்கள் ஈஸ்வரனில்லை, பாவ புண்ணியமில்லை, எனக் கூறுகின்றன." என்று அவமாயெண்ணி யொழுகுபவராதலின், தம்முடைய நாஸ்திகத் தன்மையை அச்சனகரிடத்தி லேற்றக் கருதி, இவ்விரு பகுதியையும் எழுதக்கைவா, தொழிந்தனர்போலும். இவ்வாற்றால் இவரது பண்டாரப்பாட்டும் இவர் பாட்டும் பகட்டுப் பாட்டெடன வெள்ளிடை விலங்கலாய் விளங்கவில்லையா?

இன்னும் மூலகிரந்தத்தில் சனகமகா ராஜாவே, பிராமண வடிவங்கொண்டு வந்த விநாயகக் கடவுளை விதிப்படி பூஜித்து, அன்னம் படைப்பித்தார் என்று காணப்படுகிறது. நமது நண்பரது உரைநடையிலே, சனகர் தனது குமாரனைக் கொண்டு போஜனஞ் செய்வித்தாரென்று பிறழ்வுடையதாகக் காணப்படுகிறது.

இனி, பிராமண வடிவங் கொண்டு வந்த விநாயகக் கடவுளைக் கண்டவுடன் இருக்கையெழுந்து, அன்புடனழைத்து, அவரை யாசனத்தி லிருத்தி சோடசவுபசாரத்துடன் சனகர் அவருக்குவேண்டிய போஜனமளித்திருக்க, அவர் பக்தியுடன் கொடுக்கவில்லை யென்றும், விரோசனை திரிசிரசு மாத்திரம் பக்தியுடன் கொடுத்தார்களென்றும், கூறுவது எவ்வாறு பொருந்தும்.



இவ்வாறே நமது செட்டியார் வெளியிட்ட சரித்திரம், தனது மூலகிரந்தத்துக்கு முழுதும் முரணுற்று விளங்குவதால் "மாறுகோளக் கூறல்" என்னும் குற்றமும், தான் விளக்கப் புகுந்த சரித்திரத்திற்குக் கொஞ்சமும் இயைபில்லாத கோவிலூர் மடாலய சாதுக்களையும், சங்கராசாரியர் முதலிய அநேகம் பெரியோர்களையும் பற்றிய சில ஆபாச வாக்கியங்கள் இடையிடையே விரவப்பெற்று விளங்குவதால் "மற்றொன்று விரித்தல்" என்னுங் குற்றமும், தன் தலைப்பெயருக்கியைந்த தூர்வை மகத்துவஞ் சுருங்கித் துவிதமகத்துவமும், தூஷணமகத்துவமும் மிகுதியாகக்காணப் பெறலால், "குன்றக் கூறல், மிகைபடக் கூறல்" என்னுங் குற்றங்களும், இன்னும் பல வெற்றுரைகளும், நிறையப்பெற்று விளங்குகின்றதென்பது அறிஞர்களுக்கொப்ப முடிந்த முடிபேயாம்.

இச்சரித்திரத்தால், ஆனைமுகத்தையும் ஐந்துகரத்தையும், பானை வயிற்றையும் பாசாங்குசத்தையும் கொண்டு விளங்கும் கணேச மூர்த்தியானவர், தன்னைப் பக்திசெய்த பரம ஏழைகளாகிய, திரிசிரசு விரோசனை யென்னும் பிராமண தம்பதிகளின், பக்திவிசேடத்தை உலகத்தாருக்கு வெளியிட்டாரெனவும், ஒரு சிறு அறுகம்புல் இவ்வளவு அரிய மகத்துவத்தை யுடையதெனவும், அதுவே அவருக்கினிய அமிர்தமயமாகிய ஆகாரமெனவும், அதனால் நாடோறுந் தன்னைப் பக்தியுடன் அருச்சிப்பவருக்குத் தனது பதவியைத்தரத்தக்க தண்ணளி யுடையவர் அப் பெருமான் எனவும், தெரியப்படுமே யொழிய, நமதுநண்பர் ஜனகரைப்பற்றிக் கற்பிக்கும் புரட்டுக்கதைக்கு அணுவேனும் அநுகூலமின்று என்பதை வெளிப்படையாய் விளக்கியவாறு காண்க!

இதுகாறுங் கூறிப்போந்த பற்பல பிரபலநியாயத்தால் நமது செட்டியார் அவலமதிகொண்டெழுந்து, வேதாந்திகளாற் புகழ்ந்துரைக்கப்படும் ஜனகமகாராஜாவைப்பற்றியெழுதிய பொய்ச்சரித்திரம், "சூறவளியிலடிபட்ட வேர் சிறுதுரும்பைப்போல்" அழிவுபாடடைந்த வரலாற்றையுணர்ந்து, நமது நண்பர்கள் யாவரும், இவரால் வெளிப்படுத்தப்பட்டிருக்கும் புரட்டுரைகளும், பொய்யுரைகளும், மயக்குரைகளும், மாறுபாட்டுரைகளும், வீணாரவார வெற்றுரைகளும், நிந்தையுரைகளும், நிரம்பிய கந்தைச் சுவடிகளை ஒருபொருட்டாகக் கைத்தலைப் படுத்தாது காலடிப்படுத்தி யொதுக்கிக் கழிப்பரெனக் கருதுகிறோம்.

இனியேனும் நமதுசெட்டியார் இவ்விதஅவலமதிகொண்டு, தீநெறிக்கட்சென்றலக்கழிந்துழலாது நன்னெறியடையுமாறு, வேண்டுவார்வேண்டும் வண்ணமீயும் பரமகருணாநிதியாகிய விநாயகக்கடவுளது உபயசரணாரவிந்தங்களைத் திரிகரணசுத்தியுடன் சிந்தித்து வாழ்த்தி வந்திக்கின்றோம்.

எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.



ஞானம்பிகா ப்ரிண்டிங் வொர்க்ஸ்,—காரைக்குடி 623-1000-18.